# ஈன்றெடுத்த ஈசன்

## தமிழ் கீர்த்தனைகள் கையேடு



காவேரி நாதன்

**மின்னூல் வெளியீடு :**

**http://FreeTamilEbooks.com**



பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/eenredutha_eesan

அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம் - ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guru-leninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushan-mugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# முன்னுரை

‘ஈன்றெடுத்த ஈசன்’ என்னும் இந்த தமிழ் கீர்த்தனைகளின் தொகுப்பு, பக்தி, சரணாகதி மற்றும் தெய்வீக தொடர்பின் ஆழமான வெளிப்பாட்டை சித்தரிக்கிறது. ஒவ்வொரு கீர்த்தனையும் ஆன்மிக ஏக்கம், நம்பிக்கையின் மாற்றம், மற்றும் தன்னுள் தெய்வீகத்தை உணர்ந்தறிதல் போன்ற தலைப்புகளை நுட்பமாகச் செதுக்கி உருவாக்குகிறது.

இந்த கீர்த்தனைகள், வாழ்க்கையின் சவால்கள் வழியே ஒருவரின் பயணத்தை பிரதிபலிக்கின்றன. பக்தியின் முக்கியத்துவம் மற்றும் உயர்ந்த சக்தியின் மீது உறுதியான நம்பிக்கையை வலியுறுத்துகின்றன. மனித வாழ்க்கையின் இருமை—மகிழ்ச்சி மற்றும் துன்பம், ஆசை

மற்றும் பற்றின்மை— ஆகியவற்றை ஆராய்ந்து, இறுதியில் ஆனந்தமும் ஆன்மிக விழிப்புணர்வும் அடைய செய்கின்றன. இவற்றில் "ஓம் நமசிவாய" என்ற மந்திரம் மீண்டும் மீண்டும் வந்து, தெய்வத்துடன் இருக்கும் புனிதமான பந்தத்தையும் உள்ளார்ந்த அமைதிக்கான தேடலையும் நினைவூட்டுகிறது.

பக்தி, இயற்கையின் அழகு, மற்றும் மனித உணர்வுகளின் நெகிழ்வும் நுட்பங்களும் வெளிப்படும் இந்த கீர்த்தனைகள், வாழ்க்கையின் நிலைமைகளையும் நித்திய உண்மையையும் தெளிவாக சித்தரிக்கின்றன. ஒவ்வொரு பாடலும் நம் ஆன்மிகப் பயணத்தை விளக்குவதோடு, தெய்வீக செயல்பாட்டின் மீதான நம் அனுபவங்களை ஆழமாகப் புரிந்துகொள்ள அழைக்கின்றது.

இந்த தொகுப்பு, தமிழ் ஆன்மிக

இலக்கியத்தின் ஆழத்தைக் கொண்டாடுவதோடு, உண்மையின் தேடலில் உள்ளவர்களுக்கு ஓர் உந்துவிசையாகவும் ஆறுதலாகவும் செயல்படுகிறது.

திருச்சிற்றம்பலம்

அடியேன்

காவேரி நாதன்

# நன்றிகள்

திரு மாணிக்கவாசர் போற்றி
திரு ஞானசம்பந்தர் போற்றி
நாயன்மார்கள் போற்றி
சிவ அடியார்கள் போற்றி
அருள் தந்த ஈசனுக்கு போற்றி.

# 1. முக்கண்ணா

முடிக்கும் முன்பு,
முடியும் என்று
முணுமுணுக்கும் முட்டாள் நான்,

முயன்ற பின்,
முதல்வன் எதற்கு
என்ற மூடன் நான்,

முழுதாய் எதையும் தெரியாமல்,
முழுமையாய் எதையும் செய்யாமல்,
முடங்கும் நான்.

முக்கண்ணா,
முகமலர வைத்து,

முறையாய் என்னை அறிய வைத்து,

திருமுறை தந்தாய்.

புராணங்கள் தெரியா பதருக்கு,

சிவபுராணம் அருளினாய்,

பஞ்சாட்சரம் கூறும்

புண்ணியம் தந்த

புனிதா!

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

## 2. ஊடுருவிய சிவனே

எதற்காக கலங்குகிறேன்,
என்னது என்று நினைத்த எல்லாம்
என்னை விட்டு போவதாலோ,

இல்லை, இருந்துகொண்டே
என்னை துன்புறுத்துவதாலோ.
என்ன நான் செய்துவிட்டேன்?
கர்ம வினைகளின் கடன்களை அடைக்க,
உதவ கூறி உன்னிடம் நின்றேன்.
உன்தன் பக்கம் நானும் செல்ல,
ஊமையாக என்னை வெல்ல,
ஊடுருவிய சிவனே.

நீதான் இனி எல்லாமே,

எந்தன் ஓட்டத்தை நிறுத்து.
பாதை மாறி சென்ற நான்,
போதை தெளித்து
நின்றுகொண்டு இருக்கிறேன்.

ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய.

# 3. திருவடி

என்னை சுற்றி மட்டும்
இப்படி நடப்பது ஏனோ,

இதையே பற்றி
பேசுவது வீனோ?

பெரிதாய் எதுவும்
கேட்க தோணவில்லை,

பெரிது என்று
எதுவும் தேவையில்லை.

நடைமுறை பழக்கத்தில் உள்ளது போல
நடந்தால் போதும் என்ற எண்ணம் தவிர,

புதிதாய் எதையும் கேட்கவே இல்லை.

அரிதிலும் பெரிது குடுத்து,
நடைமுறை வழக்கம் கெடுத்தாய்.

இருப்பதை இழப்பது வழிதான்,
புதிதாய் ஒன்று கிடைக்க பெறாமல்
இருப்பதை விட அது பெரிதே.

இது பெரிது,
அது பெரிது
என்று பிரிக்கும் அறிவை கொடுத்த உனக்கு,

அறவே அருகதை இன்றியும்,
அன்றாடம் புலம்பும் எனக்கு
அறிவுரை பத்தாது.

அனுபவம் இல்லாவிடில் அருளை கோர,

அணுஅணுவாய்

உன்னை நினைந்திட வேண்டும்.

என்ன வேண்டும் என நீ கேட்கும் முன்பே,

உன் திருவடி ஒன்றே என்று

உனக்கு உணரவைக்க வேண்டும்.

திருவடி கொடு,

அனைத்தையும் அகற்று, துடிப்புகளை துண்டித்து,

கூட்டி செல் என்னை.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

# 4. என்ன வேணும்?

உள்ளம் உருகி உன்னை நான் பாடுகிறேன்,

உள்ளம் உருக்கி உன்னையே நான் பாடுகிறேன்.

என் பாடல் கேட்டாய் என தெரிந்தும்,

உன் பதிலை தேடுகிறேன்.

காரணம் இன்றி கற்மவினைகள்

கவலைகளாய் வருவதில்லை,

வருவதில்லை,

வருவாய் தில்லை.

காரணத்தை மறைத்து,

கர்மவினையென்னும் கவலைகளை களைந்து,

என் உடம்பை பிளந்து,

உள்ளே உள்ள உன்னை

வெளிச்சத்திற்கு தாரும் அய்யா.

அனைத்தும் நீயே, எண்ணில் நீயே,

என்னை அளித்து சுடர்விடு நீயே.

பஞ்சாச்சரம் கூற வைத்தாய்,

அதுவே போதும்,

இன்னும் என்ன வேணும்?

சில வருத்தங்கள், சில பிரிவுகள்,

சந்தர்ப்பங்கள், சங்கடங்கள்,

புதிதாய் இருப்பினும்,

இந்த இருப்பே பலசுதானே.

உன்னை பாடவே இப்பிறவியே,

இதை என்றும் நாம் மறவாமையே.

இயலாமை அகற்று,

இன்பமாய் உன்னை நினைத்து,

அந்த நினைவிலே கலந்திட

அருளிடு இறைவா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 5. பரம்பொருளே

வினை அறுத்து வீடுபேறு தரும் ஈசனே,

என் ஆசை அறுத்து, புண்ணியனே

உன்னுடன் சேர புனித படுத்து.

உணர்வுகளை கட்டுப்படுத்தி,

கடவுளே ஏற்றுக்கொள் என்னை.

பரம்பொருளே, பரமேஷனே,

என் ஈசனே, உன்னை அன்றி வேறு எதுவும் வேண்டாவாறு காத்துக்கொள் அய்யா.

தேவை இல்லாவற்றில் மனம் செலுத்தி,

இன்னல்களில் சிக்கி கொள்ளும் என்னை,

சீர்படுத்து இறைவா.

உன் நாமம், உன் புகழ், உன் போற்றி,

பஞ்சாச்சரம் கூறியே இந்த ஆயுளை முடித்து விடு.

வீடுபேறு கொடு இறைவா,

எடுத்துக்கொள் என்னை,

ஏற்றுக்கொள் இறைவா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 6. கருணை

வருடங்கள் நகர்கின்றன,

வளர்த்தவன் வாசனை,

புதிதாக உணர்கின்றன.

பெற்றவளும், பேணிக்காத்தவரும்,

சகோதரி என்பவளும் சட்டென்று சலித்துவிடும்.

கர்மவினைகளின் கடன்காரர்கள்,

காரணத்தின் காட்சிகள் கண்முன் நிகழ்கின்றன.

காதல் என்னும் ஈர்ப்பில்,

இருந்த இடத்தில் இருந்து பறந்தேன்.

பரந்த மிதப்பில் பாரம் ஏற்ற தொடங்கி,

பறப்பதையும் மறந்தேன்.

விழும் பயம் வருவதனால்,

பிடித்தேடி பிரையனைப் பின் தொடர நான் என்ன?

எண்ணமில்லாமல் அவனை நெருங்க இயலாது.

இருந்தும், இந்த எண்ணம் எனக்குள் வர,

காரணம் இன்றி,

கருணை கடல் கண்முன் காட்சி தந்து,

கேவலமான என்னை கேள்வி இல்லாமல்,

அணைத்துக் கொண்ட இறைவா,

உன் மனம் நிறைவா!

உன்னை தொழுது,

உன் புகழை பாடி,

உன் திருவடியில் இருந்திட,

அருள்புரிந்திடு ஆண்டவா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

# 7. நமசிவாயம்

நமசிவாயம் நமசிவாயம் நமசிவாயம் கூறவே,

நமக்கு யாவும்,

நமக்கு யாரும்,

தேவையின்றி வாழுமே.

இந்த வாழ்வு,

எந்தன் நோவு,

எதிர்கால கனவுமே.

இந்த உடம்பின் சாவு என்று

எல்லாமே ஒரு மாயமே.

என்று உணர்த்தும் உன்தன் நாமம்,

நமசிவாயம் கூறவே!

தேவை என்று திரிந்த எல்லாம்,

தேவை இன்றி ஆகுமே.

இதை உணரும் முன்பு,

இளமைக்காலம் வீணாக போகுமே.

நமசிவாயம் நமசிவாயம்,
நமசிவாயம் வாழ்கவே!
நமசிவாயம் நமசிவாயம்,
கூறும் இளமைக்கால நாவுமே.
இந்த ஞாலம் வருவதற்கு,
அவன் அருளும் வேணுமே.
பொருளை வேண்டும்,
பொண்ணை வேண்டும்,
அருளை வேண்டா பொழுதுமே!

விலை நிலத்தில் செழித்து வளரும்

கலையாக வீணாகுமே.
கலையெடுத்து காமம் விடுத்து,

உன் நாமம் பாடவே.

ஈர்த்து என்னை ஆட்கொண்ட
ஈசன் நாமம் வாழவே.
நமசிவாயம் நமசிவாயம்,
நமசிவாயம் வாழவே!

நமசிவாய நமசிவாயம்,
நமசிவாயம் கூறவே.
அருள்புரிந்த தகப்பன் அவன்,
தாயுமான தந்தையே.

அனுதினமும் உன்தன்
நாமம் எந்தன் நாவும்
கூறுமே அதற்கும் நீயே,
அருள்புரிந்து ஆசி வழங்க வேண்டுமே.

நமசிவாய நமசிவாய,
நமசிவாயம் கூறவே!

புண்ணியம் தான்,

கோடி கூடி செய்திருக்க வேண்டுமே.

உன்னை நினைத்து உள்ளம் உருகி,

ஒரு நொடி போதுமே.

எல்லை கடந்து,

இதயம் நுழைந்து,

உன்தன் பரவசம் தான் கூடுமே!

மாயைக்கு அடிமையாய் ஆகி வாழ்ந்த வாழ்க்கை போதுமே.

அடியாருக்கு ஆனந்தம் அளிக்கும் உன்தன் பார்வை வேண்டியே,

தொடர்ந்து உன்தன் நாமம் எப்பொழுதும் கூறவேண்டுமே!

திருவடியை நான் அடைந்து,

அங்கே வாழ வேண்டுமே.

நமசிவாயம் என்னும் மந்திரம் ஒன்றே போதுமே!

எங்கும் சிதறா சிந்தை ஒன்று,

உன்னை நினைத்திட வேண்டுமே!

நமசிவாய நமசிவாய,
நீ அருள வேண்டுமே!
கூடும் நாளை,
குறையும் நாள் ஆய்
மாற்றிடு ஆயனே!
ஈஷனே பரமேஷனே,
கூட்டி செல் அய்யனே!

ஓம் நமசிவாய ஓம்,
ஓம் நமசிவாயமே!
உன்னை நினைந்து,
உன்னை புரிந்து,
உன்னை எழுதவே,

அற்புதங்கள் எப்பொழுதும் நிகழுமே!

அன்பிற்கினிய உன்தன் அருகே,
ஒரே பொழுது போதுமே!
என்னை எடுத்து,
திரியை விடுத்து,
எரிய வேண்டும் ஜோதியா!

எந்த இறைவா,
மனம் நிறைவா!
உன்னை பாட வேண்டுமே.
நமசிவாய நமசிவாய,
நமசிவாய கூறவே!

வளங்கள் யாவும்,
நலன்கள் ஆகும்
என்று நீயும் நானுமே.

நாளை எண்ணி,
நேற்றை கடந்தேன்,
உன்னை எண்ணி,
இப்பிறவியை கடக்க தான் வேண்டுமே!

ஆசை துறந்து,
அவமானம் கடந்து,
அனுபவம் இது புதிது எனினுமே,
புதிதாய் தோன்றா மாயமே!
எல்லாம் இழந்து,
உன்னில் கலந்து,
உருவமில்லா வாழ்வையே!

உன் பொன்னடியில் போக்கிட,
வேண்டும் எந்தன் அய்யனே.
ஈஷனே பரமேசனே!
பாசம் அறுத்து,

வேஷம் களைத்து,
பாகுபாடின்றி பதம் பார்க்குமே!

என் எழுத்து,
அதை நான் இழுத்து,
உன்னை போற்றலில் செலுத்துவே.

அறிவை வளர்த்து,
என்னை குறைத்து,
இவ்வுலகம் சலித்து,

சங்கரா சிவசங்கரா!
என உன் நாமம் சொல்லவே,
உன் பாதம் பணிந்து,
உன்னையே நினைந்து,
உன்னுடன் கலந்து
உயிரற்று வாழ்ந்திட

வேண்டுமே!

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய!

# 8. பரமேஷா

கூடும் நாளை,
குறையும் நாளாய்,
மாற்றிடு அய்யா,
ஈஷா, பரமேஷா,
கூட்டி செல் அய்யா!

ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய!

# 9. அருட்கடல்

எல்லாம் மறந்து உன்னையே நினைந்து,

ஒவ்வொரு மூச்சிலும் உன்னையே நுகர்ந்து,

சிவமே என் தவம்!

திருச்சிற்றம்பலம்,

அம்பலம் வேண்டி,

என் எண்ணங்கள் தாண்டி,

திருவடி அடைதல் தவிர,

ஒரு அடிகூட வேறு திசை செல்லாமல்

செம்மைப்படுத்த, இறைவா, தரவா!

தரையில் தத்தளிக்கும் நீரற்ற மீனுக்கு

துள்ளும் திறன் குடுத்து,

துடிப்பை நிறுத்து.

உன் அருட்கடலில் நீந்தி,
உதவிய நந்தி உன்முன் நாங்கள்,
என்றும் உன் நாமங்கள்
கூறும் நொடிகள்,
கோரும் பிரார்த்தனை!

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய!

# 10. சரணாகதி

ஒரு நொடி இன்பம், மறு நொடி துன்பம்,

இஷ்டம், கஷ்டம் எல்லாம் கடந்து உன்னை நோக்கி,

சரணாகதி அடைய, சந்தர்ப்பம் அனைத்தும்

சாதகமாய் மாற்றி,

உன்னையே போற்றி,

விளக்கை ஏற்றி,

வெளிச்சமாய் உன்னை காண,

உன் பாதம் பணிந்து,

என்றுமே உன் துதி பாட,

நோக்கமில்லாமல் நோன்பிருந்து,

பாராயணமாய் பஞ்சாச்சரம் நான் கூற:

ஓம் நமசிவாய

# 11. பாமாலை

உன்னை பாடவேண்டும் என்னும் உள்ளுணர்வு தந்தாய்,

எப்பொழுதும் என்னுடன் இருக்கும் நீயே என்தாய்,

பட்ட காயத்திற்கு படவைத்த மாயத்திற்கு மருந்தாய்,

என்னையே நீ கறந்தாய்,

இந்த துதியே உனக்கு விருந்தாய்.

தர வரம் வேண்டி வந்தேன் அய்யா,

உணர்வும் உயிரும் விதையும் விடையும்,

வினையும் ஒளியும் நான் என்பது கரையும்,

பாசம் எல்லாம் குறையும்.

உன் ஈர்ப்பு,

உன்னுடன் இருப்பு,

அதுவே சிறப்பு!

திருச்சிற்றம்பல ஆண்டவா,

தில்லை அம்பலா, நடராஜா,

இந்த பாமாலை ஏற்று,

அனுதினமும் உன்னையே போற்றும் அருளை தா.

கேட்டுக்கொண்டே இருக்கிறேன்,

கேள்வியாய் அல்ல விடையை,

விடை கொடு இறைவா,

இந்த பூலோகம் விட்டு

பூதலோகனே உன்னை தொட்டு வணங்கிட வேண்டும்.

பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய!

# 12. பெரியோனே

எடுத்துக்கொள் என்னை
என கேட்க தெரிந்த எனக்கு;
எடுத்துக்கொள்ளும் அளவிற்கு அருகதை உள்ளதா?
என பார்க்க தவறியது ஏனோ?
தவறியே போனாலும் தாங்கி பிடித்து,
தடம் மாறிய பிறகும்,
ஈர்த்து தகப்பனின் அணைப்பும்,
தாயின் அன்பும் தந்த உமக்கு.
உமக்கு உண்மையாய் இருக்க,
உறுதுணையாய் வரவேண்டும் இறைவா.
ஊளை இன்பத்திற்கும்,
ஊமையாய் துன்பத்திற்கும் உருகும் என்னை,
உன்னுடன் இருக்க

ஒரு இடம் தாரும் அய்யா.

கேட்பது பெரிது;

எனினும் பெரியோரிடம் கேட்காமல்

யாரிடம் கேட்பேன், அய்யா?

ஈஷா பரமேஷா, பரம்பொருளே,

ஓம் நமசிவாய!

# 13. நிலை

என்ன இருக்கு அங்க
என்று தெரியவில்லை.
இங்க இல்லை எதுவும்
என்று மட்டும் தெரிகிறது.
இங்கு இருக்கிறாய் என்றுதான்
ஒவ்வொரு நொடியும் நகருது.
அதையும் மீறி சில நொடி என்னை வறுத்துது.
அது கர்மாவா?
பக்குவ படுத்தலா?
பெயர் எதுவாக இருந்தாலும்,
இதுவும் எனக்கானது இல்லை
என்பது மட்டும் புரிகிறது.
நான் தோற்கும் போதும்,
நீ என்னை ஏற்கும் போதும்,

பல நேரங்களில் நீ என்னை உயர்த்தும் போதும்,

புரிந்த ஒன்றுதான்,

நிலை ஆனது,

உன் நிலையே.

எடுத்துக்கொள், இறைவா;

ஈர்த்துக்கொள், இறைவா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 14. துதி

உன்னை காண ஊரெல்லாம் தேடினேன்;

உணவர்வாய் என்னுள் நீயே இருக்கையில்,

வெளியில் தேடல் வேண்டாத வேலை.

உன்னை வேண்டாத வேலை இல்லாதவாறு

நமசிவாயம் கூறு.

என எண்ணம் தோன்ற வைத்ததின்

நன்றி பாடலை

துதி பாடலாய் உனக்காக;

உன்தன் அனுமதியுடன்

அரசனடி வேண்டி,

மெய்யே உன்னையே எண்ணி,

உன் புகழையே சொல்லி.

இன்பம், துன்பம் என எதுவும் தொடாமல்,

மந்திரம், துதி எதுவும் விடாமல்,

உன் திருவடி தொடும் வரை

தவம் இருக்கை வை,

இறைவா.

பாதம் தொட; பக்குவ படுத்து.

பக்கபலமாய் உன்னை நான் தொடர்ந்து

இந்த பிறப்பை உணர்ந்து

உன்னையே நுகர்ந்து

அணு நொடியும்

இமையாய் நீ காக்க.

இம்மையும் வறுமையும் மாயையுடன் சேர்க்க.

பஞ்சாச்சரத்தை பற்றிக்கொண்டேன்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 15. கழிந்த காலங்கள்

செய்வதொன்று அறியாமல்,
நடப்பது எதுவும் புரியாமல்,
ஓட்டத்தில் உள்ள எனக்கு
நாள் தோறும் காயங்களும்
ஆறாத வேதனைகளும்
சந்தோசம் என்னும் சந்தர்ப்பத்தை
சந்தித்து, சகித்து கொண்டு தொடரும்
பயணத்தின் பயனை அறியாத
கழிந்த காலங்கள்.
முடித்துவை, அய்யா;
உன் ஈர்ப்பும் என் இருப்பும்
இடைவெளி இன்றி,
உன் நாமம் நான் பாட;
பாடலாய் நீயே வந்து ஆட.

ஆடல் நாயக, வேறொரு சிந்தனை இன்றி,

உன்தன் சிந்தையில் சிறந்து

சிறகாய் பறந்து,

உன் பொற்பாதம் அடைந்து

அன்பு செய்ய அருளிடு, இறைவா.

என் ஈஷா,

பரமேசா,

ஜோதிர்லிங்கமே.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 16. தொடர்பு

புவி ஈர்ப்பு விசையால் தானே
இன்னும் இங்கு என் இருப்பு இருக்கு.

உன் ஈர்ப்பு வந்த பின்னர்,
தொடர் இருப்பிற்கு
எதற்கு நீட்டிப்பு?

பக்குவம் நான் அடைய;
நான் என்பது உடைய
சிறிதளவு பற்றும் முறிய,

உன்தன் திருவடியே என் முன் தெரிய.

உன்னை பாடி மகிழ,
தொடர்பு ஏற்படுத்து,

இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 17. மேயவனே

உடைந்து போகையில் உருவம் காட்டி,
கடந்து போகையில் கையை பிடித்து,
கசந்து போகையில் தேவையறிந்து,

தலை குனியும் வேலையில் மாலை அணிவித்து,
தவறும் நேரத்தில் தகப்பனாய் செயல்பட்டு,
பிழை விடும் போது பிள்ளை போல அணுகி,

ஒவ்வொரு நொடியும் இமைக்க தவறினாலும்
என்னை காக்க தவறா?

மேயவனே, என் மேயவனே!

ஓதும் நாவிற்கு நன்றி சொல்லவே,

உன் அனுமதியுடன் உன்னை புகழ்ந்து

எழுதும் தமிழ் மாலை.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 18. இறைவா

நான் எல்லாம் ஒரு ஆளா ஆலவாயா,

என்னையும் நீ பொருட்டாய் கருதி,

குருதி உள்ள வர கூடவே இருந்து,

இன்று உன்னை உணர்ந்த பின்,

கூட்டிசெல்லும் என் செல்வமே.

இறைதந்த இறைவா,
ஈன்றெடுத்த தாய்க்குண
ஈஷா!

வந்தடையும் நாள் வரும் முன்,

எதையும் அடையும் எண்ணம் என்னுள் வராமல்,

காத்துக்கொள், அய்யா!

பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 19. பிரார்த்தனை

அவசரமாக ஓடும் கால்களுக்கு,

ஆத்மார்த்தமாக அருளும் மலை,

அண்ணாமலையை நோக்கி நகரவை,

இறைவா!

உன்னிடம் என்னை அழைத்துக்கொள் போதும்.

நான் கூற, நீ கேட்க;

உன் கூற்றை நான் கேட்கும் நாள்,

உன் அருகில் நான்,

திருப்பாதம் பணிந்தேன்.

இறை அருள் பெறும் நேரம்,

உன் திருவடி பணிந்து நானும்

உன் பெயரையே

பிரார்த்தனை செய்யணும்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 20. நின்னையே நினைந்து

நெரித்தவரா,
நெற்றியில்
திருநீறு அணிந்து,

மொழி பிறழா
தாய் தமிழில்
உன்னை பாடி,

சிறிதும் சிந்தை சிதறாமல்
நின்னையே நினைந்து,

உன் பாதம் சேரும் நேரம் வர,

காத்திருக்கும் கண்ணின்

கருவிழியே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 21. தூயவா

நின் மதி
நிலைப்படுத்த விடா விதி,
மனதின் அலைபாயலை
கட்டுப்படுத்தும் சந்திரன்,
அவனையே பிரயாய் சூடிய
என் தலைவன்.
உன் திருவடி அடைவதே
எனக்கான ஒற்றை வழி;
அதுவரை தடுமாறி,
தடம் மாறி விடாமல் காத்துக்கொள், அய்யா.
என் ஈசனே, பரமேசனே, முடியவில்லை.
தொடராமல் துண்டித்துவிட்டு,
துடிக்கவிடாதே,

தூயவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 22. அனுபவம்

அனுபவம்
புதுமையாக இருப்பினும்,

அடைந்த பின்னே
ஆனந்தம் அதில் இல்லை
என புரிந்தேன்.

ஆனந்தா,
அகிலம் ஆளும் ஆதிகேசவா,
பொய்கெட்டு மெய்உணர்த்திவிடு,
போலி பிணைப்பை அறுத்திவிடு,

வேகமான ஓட்டத்தை நிறுத்திவிடு,
உன் அருகே என்னை நெருங்க

விடு.

உன் பொற்பாதம் வேண்டி

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

## 23. தூதுவனே

தூரத்தில் இருந்து
துயரத்தில் விழுந்து துடிப்பவனை,
தூயவனாய் துகிலேல செய்தவனே,

துன்புறுத்தும் தூசியில் இருந்து,
தூறலாய் வந்து துடைத்து
வெளியில் எடுத்த தூதுவனே,

துடுப்பான துணைவனே,
என் மூச்சு துளையே,
தூணிலும் துகளிலும் இருந்து
துவண்டுவிடாமல் காப்போனே,

அமுத துளியே,

துளசியே...

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 24. முதல்வனே

அதிசயம்
ஆச்சர்யங்கள்
உன்தன் அருள் இருக்கையில்
வழக்கங்கள்,

நடுநிலை நாதனே,
உன் நாமம் சொல்லி,
உன் பொற்பாதம் தொழும் பாக்கியம் வழங்கி,
பாக்கியை தீர்த்திடு முதல்வனே.

அந்தமும் ஆதியும் முடிவும் ஜோதியும்,
எல்லா பிறப்பும் இந்த இருப்பும்,
எழுவதும் அழுவதும்,
உதிர்வதும் மலர்வதும்,

முதிர்வதும் அனைத்திற்கும்
ஆண்டவன் நீயே.

உன் அருளாலே
எல்லாம் இங்கு நிகழுது என்று புரிந்தும்,
பூரிப்பு நான் அடைவது ஏனோ?

அடைவது உன் திருவடி,
அதற்கே நகலனும் ஒவ்வொரு நொடி.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 25. தாயுமாணவன்

துணை என்பது யாது எனில்
தெரியாது இருந்த
நேரங்களே சான்று.

தனித்து போகும் காலம் வரும் முன்,
தயாளனை
தாங்கிக்கொள்ளும் தாயுமாணவனை
புரிந்துகொண்டால்,
தனிமையின் இனிமை,
தனிமையின் தேவை
விலகி வைத்தாலும்,
விளக்காய் சுடர் விடலாம்.

எண்ணையை
திரியவைத்து

நெருப்பாய் நீ அதில் சுடர் விட,
புண்ணியம் கோடி என்றாலும்
அது குறைவே,
உன்னுடனே மன நிறைவே.
மணவாளா மன்னின் மைந்தா,
என் ஈஷா சிவனேசா!

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 26. சிவதேசம்

சந்தோசம் என்பது
சந்தேகம் இன்றி உன்வசம்.
இது அறியாது என் தேகம்
எங்கோ சுத்துது, அதுநாசம்.
சந்தோசம் தேடி அலைந்தது போதும்,
அது போதும்
என சொல்வதே சன்யாசம்.
ஓடி திரிந்தேன்
இலக்கு இன்றி பல தேசம்,
ஓயாது அயராது
என்றுமே இருக்கனும்
சிவதேசம்.

சொல்லிய வார்த்தை
அத்தனையும் நிசம்,

இதை புரிய
புலப்படும் பூவாசம்.
பஞ்சபூத உதவியுடன்
மலரும் பூ வாசம்,
பஞ்சாச்சரம் கூற வந்திடும்
பரவசம்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 27. ஆடல் அரசே

ஆட்டுவிக்கும் ஆடல் அரசே,
உன் ஆட்டத்திற்கு
நான் பாட,
வரிகள் தேடி
என் நாட்கள் ஓட,
அகிலம் ஆடும்
உன் திருவருளால்,
என் வரிகள் உன்னை பாடும்.
உன்தன் பேரருளால்.
பரமேஷனே,
பரம்பொருளே,
ஆனந்த தாண்டவம்
நான் கண்ட காட்சியும்,
என் வரிகளின் மூலம்
வர்ணனை செய்து,
செவியின் மூலம்

அனைவரும் உணர்ந்திட,
இதை நிகழ்த்திடு
இறைவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 28. பேரின்பம்

பாதை தெரியாமல்
பயணம் செய்தேன்,
வழிதவறாமல்
நடத்திச்சென்றாய்.

இலக்கு இல்லாமல்
முயற்சி செய்தேன்,
தோல்வியை ஏற்காத
தாயின் குணம் கொண்டு,
என்னை அரவணைத்து
இலக்கணம் வகுத்தாய்.

வெற்றி, தோல்வி, போட்டி எல்லாம்,
உன்தன் விளையாட்டில்,
பரிசோ

உன்தன் திருவடி.

தோற்பதற்கு காரணம்

’நான்’

என்னும் சொல்,

வெல்வதற்கு உன் நாமம் சொல்.

நமசிவாயம் சொல்லயில்,

அனைத்தும் கடந்து

உன் திருவடி அடைந்து,

பேரின்பம் பெற்று,

நமசிவாயத்தை போற்று.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 29. திருவடி மலர்

எங்கும் இருபவனே,
தொலைவில் இருப்பதையும்
துரிதமாய் காணும் விழிகளில்
தெரியாமல் இருந்தது.
இன்றே புரிந்தது—
ஆசை, பாசம்,
சிற்றின்பம், மோகம்,
காமம், கவலை,
வேதனை, உறவு,
உடுப்பு, உடம்பு என,
திரைஇட்ட மனதில்
அத்தனையும் துறந்த பின்,
எந்தன் முன்
எங்கும் நீ, எதிலும் நீ,
திரையும் நீ, இந்த தரையும் நீ,
தாரையும் நீ, கூரையும் நீ.

அருள் ஆட்சி புரியும் அன்பனே,
அரிவாள்
அறிய முடியா அப்பனே,

படைத்த உனக்கு,
திரையை உடைக்க
நீ கொடுத்த நேரம்,
பக்குவமாய் பதப்படுத்தி,
பரிசுத்தமாய் என்னை நீ எடுத்து,
உன் திருவடி
மலராய் மாற்று.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 30. கருணை பெருங்கடல்

ஆசை என்னும்
அச்சாணி பூட்டி,
வாழ்க்கை என்னும்
சக்கரம் சுழல,
ஓடும் பாதையோ
சுற்றி கொண்டே இருக்க;
சேரும் இடம் சேராமல்,
சேற்று பாதையில் சிக்கிக்கொண்டேன்.

எதை நிறுத்தி,
இந்த ஓட்டத்தை நிறுத்த;
நின்னை நினைவில் நிறுத்த,

அனைத்தையும் என்னுள் இருந்த அகற்ற.
பாதை மாற்றி,

உன் திருவடி நோக்கி,
வேறு நோக்கமற்று,
ஐம்புலனும் அய்யனையே போற்று.

பஞ்ச பூத தலைவனுக்கு,
பஞ்சாட்சரம் கூறி,
பாடலை இயற்று;

பிறவி கிடைத்தது,
பிறை சூடிய பெருமானை,
பிரியமுடன் புகழ்ந்திட.

அவன் பெருமையை உலகறிய,
கடையெனுக்கு காட்சி தந்த,
கருணை பெருங்கடல்.

இருப்பு உள்ளவரை,
இயற்றல் நில்லா;

வரம்.

இறப்பு வந்த பின்,

உன் திருவடியில்

என் கரம்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 31. சிவா

என்னை ஈர்க்கும் சக்தி,
உன்னிடமே நீ வைத்தால்;
மற்ற விஷயம் யாவும்,
என்னிடம் இருந்து அகற்றி.

உன் துதியை மட்டும்,
என் நாளும் நான் போற்றி;
உன் புகழை ஒவ்வொரு நாளும்,
நானும் இயற்றி.

இன்பம் பெற வேண்டும்,
அதுவே இன்பம் என;
நான் உணர வேண்டும்,

சிற்றின்பம் பேரின்பம் என.

எல்லாம் நீயே ஆக வேண்டும்,
அருளிடு இறைவா,
சிவா.
நம சிவாய,
நம சிவாய,
நம சிவாய.

## 32. தளரா மனம்

ஏமாற்ற, என்னை சுற்றி
சுழலும் உறவுக்குள்;
எல்லா சுழற்சிக்கும் காரணம்,
கர்த்தரே நீயே என்று.

என் மனம் உன் வனத்தில் உள்ளவரை,
வரையறுக்க வேண்டியே;
விதிமுறை இன்றி எதுமே இல்லை.

என் நாவில்,
என் நாளும் நின்றாடும் உன் நாமம்;
பஞ்சாச்சரம் போதுமே.

எத்துயர் வரினும்,

எதிர்த்து துரத்தி விட,

தளரா மனம்;

உன் நினைவில் இருந்து அகலா மனம்.

உன் நாமம் கூறுமே.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 33. அருளாலயம்

தில்லையின் எல்லைக்குள்
என்னை வைத்தாய்;
திமிரெடுத்து அதற்குள் கல்லை வைத்தேன்.

அடியார்களும் அடைய நினைத்த;
ஆனந்த ஆடலின் அரங்க இடத்தினை
அடியேனுக்கு அளித்தாய்.

ஆனந்தா, உன்னை கண்டும்,
பரவசம் கொண்டும்
போதையின் பாதையில்
போய்க்கொண்டிருந்தேன்.

வெளியே போகும் வழியை,

நீ அருகில் தந்தும்;

வழியில் இருந்து வெளியில் சென்றேன்.

கூறு கெட்டு,

கூத்தாடி தூரம் சென்றேன்.

நோக்கம் மாறி,

பாதை மாறி,

வழி மாறி,

வலிப்பெற்றேன்.

புண்ணியம் வேண்டும்;

தில்லை காற்றை சுவாசிக்க.

காற்று, ஆகாயம், நிலம், நெருப்பு, நீரை

உணர்ந்தும்,

அனுபவித்தும்,

அருமை புரியாமல்,

வெளிவந்து அகப்பட்டு கொண்டேன்.

ஐம்பூதங்களை விட்டு,
ஐம்புலனின் ஆசைக்கு
அடிபணிந்து விட்டேன்.
வெகு தூரம் வந்த பின்னும்,
தாயன்பு மாறாமல்;
தயக்கம் இன்றி
என்னுடனே இருக்கும்
என் ஈசனே.

விழும் போதும், தாங்கி;
அழும்போதும், தேத்தி;
அகப்படாமல் அகற்றி,
இன்றும் இன்னும்
ஒவ்வொரு நொடியும்
நுண்ணியனே,
நூதன முறையில்

நொறுங்க விடாமல்
சேர்ந்துகொண்டவனே.

உன்னை போற்றி, புகழ்ந்து பாடாமல்
கழிந்த காலம் சேர்த்து,
உன்னை அன்றி,
சிந்தை சிதறாமல்,
சிவனையே,
சித்தாந்தமாய் மாற்று.
எழுத்தை வார்த்தையாய்,
வாக்கியமாய்,
பாடலை இசையாய்,
பகிர்ந்து பாத்தும் சேரும் வரை
பார்த்துக்கொள், அய்யா.

அம்பலம் சென்று உன்னை காண
அருள் புரி, அய்யா.

அகிலமே நீ ஆகியும்
அம்பலத்தில் உன்னை பாடும்
அருள் வேண்டும்.

அருகே நீ இருந்தும்,
அருளாலயம் நான் வர வேண்டும்.
அன்பனே, அரசனே, அருமையான்.
சிவபெருமான்.

ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய.

# 34. ஆதி

உன்னை பாடி உள்ளம் மகிழ;
என்னை சுற்றி உன்னால் நிகழ.

எல்லாம் விட்டு நான் நகல;
உன் திருவடியே சகல.

ஆட்டத்திற்கு ஆண்டவன் நீ;
ஆடவிடும் பாடலும் நீ.
அரங்கேற்றத்தினில் ஆதியும் நீ;

அன்பனுக்கு அமரன் நீ.

அறமே அகலா அகிலம் நீ;
அல்லல் அறுக்கும் அறிவே நீ.
இன்றியமையா இன்பம் நீ;
ஈன்று எடுத்து இறுக்கி சுரக்கும்

தாய் பாலும் நீ.

புனிதமான புணர்வும் நீ;
ஆக்கம் நீ;
அளவு நீ;
நோக்கம் நீ;
நுழைவும் நீ.

பார்க்கும் பார்வையில்
இந்த விதியின் கோர்வையில்
பின்னிய பின்னளில்
சிக்கிய சிறு மலரினை
மாலையாய் ஏற்று
பிறவி பயனை அளித்தவன் நீ.

பஞ்ச பூதம்;
பஞ்ச புலன்கள்கள்;
பக்குவ பட்டும்;

பஞ்சாச்சரம் கூற.

ஓம் நமசிவாய;

அனைத்தும் மாற;

மாற்றம் நீ;

மா நீ.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 35. நன்றி

தமிழால் தலைவனை
தாங்கும் சொற்களுக்கு நன்றி கூற;
தமிழை அழைத்தேன்;
அவன் அருளாலே அவனை போற்றி;
அவன் அருளாலே அவனை புகழ்ந்தேன்.

கும்பிட கைதந்தாய்;
வணங்கிட தலை தந்தாய்;
உன்னை புகழ்ந்திட நாவை தந்தாய்;
உன்னை உணர்ந்திட இந்த உடல் தந்தாய்.

நீ குடி இருக்க என் மனம் தந்தாய்;

அதை தூய்மை படுத்த
சூழ்நிலை தந்தாய்.
உன்னை நோக்கி வர
என் கால்கள் தந்தாய்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 36. இதயத்தோனே

எதையும் எதிர்பார்க்காமல்
உன் திருவடி நிழலில்
இருந்திட வேண்டும்;
யாருக்கும் அடி பணியாமல்
உன் திருடி ஒன்றே வேதம்
என வாழ்ந்திட வேண்டும்.

துணை என நீயே
என் இதயத்தோனே,
என் இறைவா; நமசிவாய,
உன் பாதம் பணிந்தேன்.

அங்கும் இங்கும்
அலைந்து திரிந்து
நிம்மதி வேண்டி;
எதையோ செய்து

திரிந்து கொண்டிருக்கும் என்னை,

உன் வழி நடத்து.

உன் நாமம்,

உன் பாடல்,

திருமுறை மட்டும் கூறும்

நா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 37. பேறின்பமே

சுழலும் பூமியும்,
உன்தன் புவியும்
என்னை சுற்றி நிகழும் யாவையும் அறிய,
எதுவாய் ஆயினும்;
ஆயா ஏதுவாய்
நீ அருள
இருண்ட என்னுள்
வெளிச்சமாய் விளங்கும் ஜோதியே,
ஆதியே,
ஆதிசேஷனே,
பரம்பொருளே,
பேறின்பமே.
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

## 38. தென்னாடுடைய சிவனே

தெளிவே தேவையே,
தேங்கிய இந்த நாயை,
தேனாய் ஆக்கிய தெய்வமே.
தென்றலே, தெவிட்டா அமுதமே.
தெரு ஓரம் இருந்தவனுக்கு
தேரில் காட்சியளித்தவனே.
தேசமே, தேகமே,
தெப்பமே, தேடியே திளைக்கின்றேன்,
தென்னாடுடைய சிவனே.
தில்லை அம்பலமே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 39. விதியே

குழப்பமே என்னை சுற்றி இருக்க,

நானோ உன்னை சுற்றி இருக்க.

ஆசையின் விதியே
இந்த குழப்பத்தின் தொடக்கம்,

உன்னை அடையும் பேராசையே
இதின் முடிவு.

தடங்களை தாண்டி,
இன்னல்களை கடந்து,
உன்னை நான் அடைந்து,
அனைத்தையும் மறந்து,
உன் திருவடியில் கிடைக்க

அருளிடு, இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 40. அமர்நாத்

உன்னை பாட,

தமிழ் வார்த்தை நான் தேட;

அவசியம் இல்லாமல்,

அதுவாய் வந்து,

அணியில் அமர்ந்து,

அமர்நாதனை புகழ்ந்து,

கேளா சொற்களும்;

கேதார்நாதனை புகழ்ந்து,

இப்பொழுதும் ஈசனை பறை சாற்றும்.

பாசமான பங்களிப்பை,

வார்த்தையாய், வசனமாய்,

வாக்கியமாய் வரையறுக்க முடியா?

வடிவமாய்

கருணை கடலுக்கு;

என் கவிதையோ சிறு துளி.
அதையும் அவன் திருவடி சேர,
ரகசிய ரசாயன மாற்றம் தரும்.

சிதம்பரம் ஆரூர் ஆண்டவனே;
திருவாரூர் தில்லை அம்பலனே;
உன் பெயரை வரிகளுக்குள் வைக்க,
அனுமதித்த பெரு உள்ளம் கொண்ட
எண்டதெய்வமே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 41. பித்தன்

சிவா,
பித்தனாய் உன் நினைவிலே
நான் இருக்க வேண்டும்;
சுற்றி உள்ள எதுவும்
என்னை பயன்படுத்த,
பயன்படாது உன் நினைப்பு.
உன் திரு முகம்,
உன் பொன்னடி;
நீ நான்
பாடல்,
புன்னகையால்
உன்னை அர்ச்சித்து,
சிரிப்பூவாழ்
உன்னை அலங்கரித்து.

சிகரமாய் நீ,

சிங்காரமாய்,
சீக்கிரமாய்
சிந்தையில்
சிவமாகு.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

## 42. தாண்டவ கோலம்

போக வேண்டும் சிதம்பரம்,

போக வேண்டும் திருவண்ணாமலை,

போக வேண்டும் காலகஸ்த்தி,

போக வேண்டும் திருவிடைமருதூர்,

போக வேண்டும் திருவாரூர்.

காண வேண்டும் ஈசனை,

சிவநேசனை,

நடராஜனை,

என் தில்லை அம்பலனை,

தாண்டவனை,

தாண்டவ கோலத்தில்

அவன் தூக்கிய காலின்

அடி காண வேண்டும்

அதுவே என்

எதிர் காலம்

ஆகா வேண்டும்.

அதன் பின் காலத்தில்

நான் கணக்கிட முடியா,

எல்லையில் தில்லையின்

நினைவில் நித்தமும்

மொழியால் கரத்தால்

மனதால் ரசிக்க வேண்டும்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 43. சிந்தையே

உன்னை புகழ்ந்து
உன் புகழை பாட,
என்ன பாக்கியம் நான் செய்தேன்!

கருணை பெருங்கடலே,
ஜோதிர்லிங்கமே!
நான் உணர்ந்த உன்னை,
இந்த ஊர் உணர,
என் மூலம் மொழியாய்
வழியாய் வா,
இறைவா!
உன் அருள் இந்த உலகை ஆழ,
உன் திருவடியில் நான் வாழ.

அருள் கொடு இறைவா,
என் பரம்பொருளே,

என் ஈசனே!

உன்னை காண கண் கோடி வேண்டும்,

என்பர்

இந்த கண்ணே,

நீதானே!

இறைவா!

உன்னை உணர மனம் வேண்டும்,

என்பர்

இந்த மனமே,

நீதானே!

உன்னை சிந்திக்க சிந்தை வேண்டும்,

என்பர்

சிந்தையே,

நீதானே!

இறைவா!

ஊனும் உயிரும்,
உடலும் உண்மையும்,
உலகமும் நீயே.
ஆக்கலும் அளித்தலும்,
உன் திரு விளையாடலே,
நான் இன்னும் இங்க இருக்க.
எதையோ நீ மறைக்க.
ஒவ்வரு நாளும்
நான் உன்னை உரைக்க.

அந்த ரகசியம் அறிய கண்டேன்,
இந்த பாக்கியம் கிடைக்கும்;
நான் அருளும் பெற்றேன்.
பாவம் நான் செய்ததும்,
உன் பயணத்தில்
நான் இணைந்ததும்,
வழியாய் நீ நடந்ததும்,

# 44. முக்கண்ணனே

இன்று நான் இருப்பதும்,
நாளை நான் இறப்பதும்,
எதுவாக இருப்பினும்,
உன்னை நான் நினைப்பதும்,
உன்னையே நினைப்பதும்,
என்றும் மாறாமல்,
உன் திருவடி அடையும் வரை,
வழிநடத்து ஐயா.

ஆசை, பாசம், மோசம்,
எல்லாம் நாசம்;
நீயே நிசம்,
உலகை காக்க.
நீ பருகிய விஷம்,
தாயின் பாசத்தின் உச்சம்,
காக்கும் தெய்வம்;

அளிக்கும் தெய்வம்;
வாழ்விக்கும் தெய்வம்;
எல்லாம் நீயே,
முக்கண்ணனே.

ஓம் நமசிவாய!

# 45. ஆண்டவா

கேட்டது கிடைக்காத போது,
வரும் மன வருத்தம்;
ஆண்டவா,
பண்ணு இதுக்கு ஒரு நிறுத்தம்.

கேட்பதற்கும்
மன வருத்தத்திற்கு
வேண்டுதல் வேண்டா;
வாழ்வை கொடு, இறைவா.

ஓம் நமசிவாய!
தவிர வேறு எதுவும் என்னா வண்ணம்?

என் நினைவலையை சரி செய்,

இறைவா.

ஓம் நமசிவாய!

# 46. விஸ்வரூப காட்சி

என்னை சுற்றி
எங்கும் நீ இருந்தாய்;
என் தாய் காட்டிய
உன்னை கண்டும்,
வணங்கியும்
உணராமல் இருந்தேன்.
நீயே என்னை அழைத்து,
புண்ணியர்களின் புண்ணியமான
புனித இடமான சிதம்பரத்தில்
என்னை தங்க விட்டாய்.

காண கிடைக்கா
உன் தாண்டவம்,
தேர் திருவிழா
காண வைத்தாய்.

இருந்தும்,
அது எதுவும் அறியாமல்,
எதோ ஒரு மோகத்தில்
அற்ப இன்பத்திற்கு
அடிமையாகி,
உன் அடியார் ஆகும் வாய்ப்பை
இழந்து திரிந்தேன்.

அருகை விட தொலைவில் தான்
உன் அருமை
புரியும் என்று
என்னை விளக்க ஆரம்பித்தாய்.
அந்த விளக்கம் பெறுக,
பெறுக,
விளங்க ஆரம்பித்தது,
இறைவா,
இடைவெளி போதும்

விளங்கி விட்டது.
என் தவறு
மன்னியும், அய்யா.

இத்தனை செய்த பின்பும்,
விதியின் விளையாட்டால்,
நான் கண்ணீர் சிந்தும் வேலையில்,
உன் விஸ்வரூப காட்சி தந்தாய்.
அந்த நம்பிக்கையில்
மீண்டும் எழுந்தேன்.
இன்னும் சிற்றின்பத்தில்
சிக்கும் என்னை,
தில்லைக்கு அழைத்து போ,
ஆண்டவா.
அதுவே என் உறுதியான
இறுதி பயணம் ஆகா;

அருளிடு.

சிறுக சிறுக என்னை
புனித படுத்தல்,
தில்லையே கேதார்நாத்திற்கு
அழைத்து என் ஆன்மீக பயணத்திற்கு
ஆணிவேர் ஊன்ற செய்தாய்.
இதில் சிறிதும் தடை வராமல்,
காத்தருளும், அய்யா.

ஓம் நமசிவாய!
உன் பொன்னடி மட்டுமே
என் சிந்தையாய் மாற;
அருளிடு, இறைவா.

# 47. வேண்டாம்

அன்பு வேண்டாம்,
ஆசை வேண்டாம்,
இன்பம் வேண்டாம்,
ஈர்ப்பு வேண்டாம்,
உடல் வேண்டாம்,
ஊரு வேண்டாம்,
எதுவும் வேண்டாம்,
ஏழு ஜென்மம் வேண்டாம்,
ஐயம் வேண்டாம்,
ஒன்றும் வேண்டாம்,
ஓசை வேண்டாம்,
ஔடதமும் வேண்டாம்.
ஓம் நமசிவாயா வேண்டும்.

## 48. அய்யா

கஷ்டம் வரும் பொழுது
உன்னை நினைக்கும் மனம்
இஷ்டமாக எப்பொழுதும்
உன்னை நினைக்க வேண்டும்.

நின்னை அன்றி வேறு
எதுவும் எனக்கு
சுகம் தாரா வாறு
அருள் தர வேண்டும்.

நீயே சகலமும் என்று
இந்த சிறு மூளையோனுக்கு
எப்பொழுதும்
நீ உணர வைக்க வேண்டும்.

ஆனந்தம்

பேரானந்தம் நீயே
மற்ற ஆசை எதுவும்
என்னை ஈர்க்கா இருக்க வேண்டும்.

ஈன்றெடுத்து
ஈசன்
ஈர்த்து என்னை
இறுக்கி
உன்னுள் வைக்கும்,
அய்யா.

போதும் இல்வாழ்க்கை,
இந்த வாழ்க்கை,
இன்ப வாழ்க்கை,
துன்பம் நோக்கும்.
போக்கு நிறுத்து,
உன் வலி செலுத்து;
நீயே

நீயே,

நீ தான் அழைத்து,

இழுத்து இருக் கட்டி போடு.

ஓம் நமசிவாய.

# 49. எதிர்பார்ப்பு

எதிர்பார்த்து கொண்டே இருக்கின்றேன்,
இந்த எதிர்பார்ப்பது எதற்கு
என்று கூட தெரியாமல்,

உன் கூட
கூட தெரியாமல்,
இந்த எதிர்பார்ப்பு
எதையோ எதிர்பார்க்கிறது.

என் எதிர்காலம் நீ,
காலமே நீ;
என் உடல், உயிர், ஆன்மா
எல்லாம் மாயை.
உன்னை தவிர
உண்மை என்று

எதுவும் இவ்வுலகில் இல்லை.

இது அறிந்தும், புரிந்தும்,
தெரிந்தும், முடிவில்லா
பயணத்தில் பயணியாக,
பயனற்று கிடக்கும் என்னை.
பாதை மாற்றி வழி நடத்து,
என் அய்யா,
என் அரனே,
என் ஈசனே.

சிந்தனை சிதறாமல்,
என் சிந்தையுள் வந்து,
நீ அமர்ந்து,
உன் திருவடிக்கு
நான் தவழ்ந்து
அங்கே நான்

முடிய வேண்டும்.

மரணம் இல்லா,
மறுபிறப்பு இல்லா,
காலமற்ற நிலையில்
நிறுத்திடு, இறைவா.

ஓம் நமசிவாய.

# 50. போற்றி

போற்றி, போற்றி, அரனே! போற்றி,
போற்றி, போற்றி, அன்பே! போற்றி,
போற்றி, போற்றி, அறிவே! போற்றி,
போற்றி, போற்றி, அழகே! போற்றி,
போற்றி, போற்றி, அரசே! போற்றி,
போற்றி, போற்றி, அலையே! போற்றி,
போற்றி, போற்றி, அய்யா! போற்றி,
போற்றி, போற்றி, அணியே! போற்றி,
போற்றி, போற்றி, அங்கமே! போற்றி,
போற்றி, போற்றி, அகரம்!

போற்றி,

போற்றி, போற்றி, அஞ்சான்! போற்றி,

போற்றி, போற்றி, அல்லல் அறுப்பான்! போற்றி,

போற்றி, போற்றி, அமுதே! போற்றி,

போற்றி, போற்றி, அன்னையே! போற்றி,

போற்றி, போற்றி, அப்பா! போற்றி,

போற்றி, போற்றி, அம்மா! போற்றி,

போற்றி, போற்றி, அண்ணா! போற்றி,

போற்றி, போற்றி, அக்கா! போற்றி,

போற்றி, போற்றி, அகிலம்! போற்றி,

போற்றி, போற்றி, அகலம்! போற்றி,

போற்றி, போற்றி, அச்சா! போற்றி,

போற்றி, போற்றி, அச்சம் அளிப்பான்! போற்றி,

போற்றி, போற்றி, அடியே! போற்றி,

போற்றி, போற்றி, அறுப்பான்! போற்றி,

போற்றி, போற்றி, அழிப்பான்! போற்றி.

ஓம் நமசிவாய.

# 51. பரஞ்சோதியே

அச்சம் இல்லா, மிச்சம் இல்லா,
இச்சை அகற்றி, எச்சம் அகற்றி,
இறங்கினாலும், ஏறினாலும்,
இன்பமின்றி, துன்பமின்றி,
பகைவன் இன்றி, பாகுபாடு இன்றி,
எதிர்பார்ப்பும், இழந்த வெறுப்பும்,
எந்த செயலும், இந்த செயலும்,
அதுவும், இதுவும், எதுவுமேயாயின்,
எந்தன் அருகே வாரா மாறு,
எந்தன் சிந்தை எங்கும்,
சிதரா உன்தன் நினைப்பே,
என்றும் மாறா அருளோ வரமோ,
உன்தன் திருவடி அடியில்,

நானும் உன்தன் பாத தோழா இருந்திட,

கூறும் நாலா இந்த நாள்,
பொன்நாள் பொற்பாதம் காட்டி,
கூட்டிக்கொள் ஆதியே
பரஞ்சோதியே.

ஓம் நமசிவாய!

# 52. அன்பே

கேட்டதை கொடுத்து,
துயரத்தை துடைக்கும்,
தூயவனே,
துளைக்கும் ஆசை,
தூரம் செல்ல
உன் அருகை,
நானும் வெல்ல
அருழிடு அன்பே.

உன்தன் திருவடி மட்டும்,
என் கண்ணிலும் கனவிலும்,
நினைவிலும் செயலிலும்,
கலந்து மலர்ந்து,
முழுவதுமாய் இருக்க இடம்குடு,

இறைவா.

அன்பனே, ஆனந்தமே,
இனியவனே, ஈசனே,
உரிமயனே, ஊனே,
எழியனே, ஏகாம்பரனே,
ஐந்தெளுத்தே, ஒளியே,
ஓசையே, ஔடதமே.

பன்னிரெண்டு எழுத்தான,
பதினொரு முகமான,
பத்து வகையான,
ஒன்பது கோளான,
எட்டு திசைக்கும்,
ஏலு மலையான,
ஆறு உயிரான,
ஐந்து எழுத்தான,
நான்கு முகனே,

முக்கண்ணனே,

இரு பாலனே,

ஒன்றானவனே.

ஓம் நமசிவாய!

# 53. விதை

எல்லாம் விட,
நீயே விடை,
கஷ்டமான இஷ்டங்கள்,
கருணை கடலை
அடையவிடா,
அணைகள்.

எல்லாம் என் வினைகள்
முளைக்கின்றன;
விதைகள் வளர விடா.
தடுங்கள், போதும்.
இது அது என,
இச்சையா திரிகின்ற
எண்ணெயை எரித்துவிடு,

இறைவா.

மண்டியிட்டு கேட்கிறேன்:
ஆசை அழித்து,
ஆணவம் ஒளித்து,
உன் பாத நிழலிலே
என்னை மறைத்திடு,
அய்யா.

ஓம் நமசிவாய!
ஓம் நமசிவாய!
ஓம் நமசிவாய!

# 54. உண்ணவன்

உன்னை நினையா,
உன்னிடம் நின்று
என்னை நின்னைந்த,
மூடனையும்
முதல்வனே,
முக்கண்ணனே,
ஆதரித்து
ஆட்சி செய்யும்
ஆண்டவனே.

உன் நினைப்பையன்றி
வேறெதுவும் நினையா;
மனம் கொடு,
திருப்பாதம் நிழர்கொடு.

மொத்தமாக என்னை எடு;

உண்ணுடனே இருப்பு வேண்டும்,

உண்ணவன் நான்.

ஓம் நமசிவாய.

# 55. ஆணிவேர்

என்னவனே,

எண்ணமாய்

என்றும் என்னுள்

எதிர்வினை ஆனவனே.

ஆணவம் அழித்து

அடங்கும் ஆற்றலை,

ஆணிவேராய் அனுக வைதவனே.

கஷ்டங்கள் கடந்து

சென்றபின் உணர்ந்து

உன்னையே மறந்து

உயிருடன் இருந்து

இறந்த மனநிலை கொண்ட

என்னையும் நீ கொணர்ந்து,

பசியாட்ரிய தாயே.

பாவம் செய்த எனக்கும்
பாதகம் என்னாத பெற்றோனே.

குணத்தாலும், மணத்தாலும்
உயர்ந்தோனே,
உன்னை அன்றி
வேறு எதுவும் என்னாத மனம்;
வேறு எதுவும் என்னிடம்
நெறுங்காத வண்ணம்.
உன் திருபாத நிழலில்
அடைக்கலம் கொடு இறைவா.

என் நாளும்,
என் நாவில் நின்றாடும்
உன் நாமம் பஞ்சாசரம் போதுமே.

ஓம் நமசிவாய.

# 56. சிந்தை

என்னை சுற்றி
நடக்கும் எதற்கும்
என்ன என்னால்
செய்ய முடியும் என்று
எனக்கு தெரியவில்லை.
நான் அறிந்ததெல்லம்
உன்னை மட்டும் தான்.
நான் அறிய நினைப்பதும்
உன்னை மட்டும் தான்.
வேறு சுகமோ துக்கமோ
என்னை வந்தடயாவாறு
என் சிந்தை, செயல்
அனைத்தும் நீ
நீ மட்டுமே
இருக்குமாறு
அருளிடு இறைவா.

வா வந்து என்னை

ஆட்கொண்டு போ

என் ஈசா பரமேசா.

ஓம் நமசிவாய.

# 57. உன்னையன்றி

நீ இருக்க
நான் எதற்கு கலங்க
சூழ்நிலையும் சூழ்ச்சியும்
நிலை அல்ல.
நீயே என் நிலை.
உன்னையன்றி எதையோ
எண்ணி வருத்தப்படும்
மனதை ஒரு நிலைப்படுத்து,
சிவனே.
உன்னை மட்டும் நினயும்
மனம் தா.

ஓம் நமசிவாய.

## 58. வித்தகா

வினையின் விளைவாய்
விபரீதம் நிகள்கயில்
ஆதரவற்று அளரும் அற்பனுக்கு
அன்பாய் ஆச்சர்யம் ஊட்டும் வண்ணம்
விஸ்வரூப காட்சியளித்து
கண் சிமிட்ட மறந்து
உன்னையே
உன் ஆழகை
பிரமிக்க வைத்தது
உன்னை நோக்கி
பயணப்பட வைத்த
வித்தகா.

ஒரு முறையல்ல
ஒவ்வொரு முறையும்

முறையாய்
உன் இருப்பை மறந்து
உலக வாழ்வின் பக்கம்
நின்ற என்னை
சிறிதும் எண்ணெயில் மூழ்கி
அணைந்து விடாமல்
தூண்டிவிட்டு ஒளிர்விட
செய்ந்தவனே.

கூட்டி செல்லடா
உன்னை அன்றி
வேறொரு நினைப்பும்
என்னிடம் நெருங்கா
வண்ணம்
என்னை சுற்றி
எடுத்துக்கொள், இறைவா.

ஓம் நமசிவாய.

# 59. அற்பனின் ஆசை

அற்புதம் நிகழ்த்திய இறைவா,
அற்பனின் ஆசையை
அழுத்திடு நிரைவா.
உன்னையே நினைவா,
பனிவா கனிவா,
என் தலைவா,
அழைத்து போகவா,
சிவா.

ஓம் நமசிவாய.

# 60. நிறையே

எதற்காக படைக்க பெற்றேன்,
எதற்காக மறுபடி மறுபடி
உடைக்க பெற்றேன்.
உன்னை அறிய
என்முன்
நீ தெரிய,
கொஞ்சம் கொஞ்சமாக
உன்னை புரிய.

இதெல்லாம் நீ வரைய,
உன்னுடன் இருந்து
நானும் அதை உறைய.

இறையே,
பிறையே,
உடைதிடு

இந்த சிறையை,
உடைத்திடு கரையை.
உன்னையே துதிக்கவேண்டும்
நிறைய.

ஓம் நமசிவாய.

# 61. பேரொழியே

இறைவன்
இருக்கையில்
இரு கையில்
இயலும் என
எண்ணம் தோன்ற,
அந்த எண்ணமும்
அவனையே என்ன
என்னில்
அடங்கா
பேரொழியே.

ஓம் நமசிவாய.

# 62. இல்லை

ஒன்றுமே இல்லை
பிறப்பது, நடப்பது,
நடிப்பது, இருப்பது,
கிடப்பது, இறப்பது,
போவது, எதுவுமே
ஒன்றுமே இல்லை
உன் ஒருவனை தவிர
அதை தவற விடாது
காத்தருளும் அய்யா
ஈசா பரமேசா
ஆதிசேஷா
ஓம் நமசிவாய.

## 63. அர்த்தநாதீஸ்வரா

இன்னும் எதிர்பார்ப்பு
என்னுள் ஏனோ
நாளைய பயம்
இன்னும்
என்னுள் ஏனோ
நாளை உண்டு
என்ற நம்பிக்கை
நீயும் உண்டு என்று
நம்பாமல் வருந்துவது வீனே
ஆக்கி அழித்து
நடுநிலையாக்கும்
அர்த்தநாதீஸ்வரா
கட்டி அனைத்து
ஏற்றுக்கொள் ஆண்டவா
வலிக்குது அய்யா
இந்த கண்ணில்

நீர் இருக்க

வேண்டும்

கண்ணீர் இருக்கு அய்யா

விரைந்து வந்து

வீடுபேற்றை தந்திடு

ஓம் நமசிவாய.

# 64. திருச்சிற்றம்பலம்

மாற்றம்
ஏமாற்றம்
தடுமாற்றம்
நாற்றம்
குற்றம்
கடந்து செல்லும்
கடத்தி விடாமல்
திருச்சிற்றம்பலம்
திருவருளால்
அவன் அருளாலே
அவன் தாள் வணங்கி
ஓம் நமசிவாய.

# 65. அய்யனே

பொன் கேட்டு அடி பெற்றேன்
பொன்னடிகள் கேட்க
தவறி விழுந்தேன்
சூழலுக்குள்
வாழ்வதாக
விதியால்
வீழ்ந்துகொன்றிருக்கும் பாவம்
அறியா பாவிக்கு
சினம்மில்லாமல்
சிரியோனுக்கு
அருளிட வாரும் அய்யனே
சிவனே
ஓம் நமசிவாய
உன்னடி
திருவடி
பணிந்தேன் அய்யா

# 66. திருவிளையாடல்

இந்த பிறப்பு
உன்தன் படைப்பு
இந்த இருப்பு
உன்தன் விருப்பு
வரும் இறப்பு
உன்தன் நடப்பு.
இவட்ருக்குள்
உண்ணுடன் நட்பு
நாடகம் இல்லா சிறப்பு
திருவிளையாடல்
ஓம் நமசிவாய.

# 67. சேயே

எதை எதையோ எண்ணமாய்க் கொண்டு
ஓடிக்கொண்டிருக்கும் ஜடத்திற்கு
இறைவா

உன் இறையருள் வேண்ட
கூறும் அய்யா
மாராபிறப்பை
மருபிறப்பை
மறைய செய்
சேயே
கஷ்டம் கடந்து
இஷ்டம் கடந்து
நாட்டம் கடந்து
சிந்தை கடந்து
செயல் கடந்து

நிலை கடந்து
நியம் கடந்து
பொய் கடந்து
பொறாமை கடந்து
உன் திருவடி அடைந்து

ஓம் நமசிவாய.

# 68. ரூபங்கல்

பல ரூபங்களில்
நீ என்னோடு இருந்ததை
நான் மறந்தது
மறைத்தது எப்படி
என்னுள் நீ இருக்க
நான் யார்
உன்னை யோசிக்க
உன்னை நான் வேண்ட
எதை எதையோ நான் கேட்க
அது அனைத்தும் நீ குடுக்க
உன்னையே வேண்டாமல்
உன்னிடமே வேண்டிய
வெட்கம் இல்லா
வெகுளியாய் நான்
மன்னித்து மறந்து
என்னை கொணர்ந்து

உணர்ந்து
ஏற்றுக்கொள் இறைவா
இந்த நில வாழ்வை
மரத்து உன் திரு நிழலிலே
தஞ்சம் அடைய வையைப்பா
சிவனே
ஓம் நமசிவாய.

# 69. பாக்கியம்

அப்பன் மூலம் கேட்க வைத்து,
அறிவின் மூலம் அறிய வைத்து,

ஆசையாய் உணரவைத்து,
கண்களுக்கு விருந்தாக
உன்னை நினைத்து,
திரு அம்பலத்தை
தேட வைத்து.

தேடி கிடைத்த இன்பத்தை
பெற வைத்து,
சிறப்பு அலங்காரம்,
ஆர்த்தி
என அமர்க்களம் காட்டி,
ஆண்டவா,
உன் திரு உருவமே

கண்கொள்ளா காட்சி.

விளக்கு ஒளியில்
தீப ஆராதனை கண்டதே
இப்பிறவி பாக்கியம்;
அந்த அருட்பிரசாத அனுபவம்
முழுவதும் உணரும் முன்,
உன் அபிஷேக பால்,
ஞானசம்பந்தர் பசியாற்றிய
பரம்பொருளின் பொருள் விளங்க வைத்த,
உன் கவனிப்பில் பூரிப்பு அடைந்தேன்.

ஞான லிங்கமே,
ஏற்றுக்கொள், ஆண்டவா.
ஓம் நமசிவாய.

# 70. சேவகனே

இப்பிறவியில் இன்பமே,
இப்பிறவியே இன்பமா?
முப்பிறவியின் வினையே,
முப்பிறவியே வினையா?

மருபிறப்பின் மறைப்பனே,
நல்லது உரைப்பவனே,
உண்மையை உணர்த்தி
கூறுகெட்டவனுக்கு,
கூறியது போதும்,
கூட்டிச் செல் என் சேவகனே,
சிவனே,
நேசனே,
சிவனேசனே.

ஓம் நமசிவாய.

# 71. தத்துவம்

வாழ்க்கை தத்துவம்
வருந்துகிறேன்.
நம்பிக்கைக்கு எதிராக,
என் நண்பனுக்கு எதிராக,
என் காவலனுக்கு எதிராக,
என் இறைவனுக்கு எதிராக.
சிவன் இருக்கையில் பயம் எதற்கு?
நான் என்பது யார்?
லட்சியம், அலட்சியம்;
வாழ்க்கை தத்துவம்.
தந்திரம், மந்திரம்,
எண்ணம், செயல் அனைத்தும் நீயே.

உன்னை வேண்டி,
இது அத்தனையும் வேண்டா,

நொடி கொடு, இறைவா.
திருவடியில் சேர்திடு;
மாய உலகில் இருந்து
என்னை எடுத்திடு.

ஓம் நமசிவாய.

# 72. சாதூறியனே

சாதாரணமானவனை,
சங்கரனே,
சாட்சி இல்லாமல்,
சங்கடம் இல்லாமல்,
சமாதானம் இல்லாமல்,
சம்மதம் இல்லாமல்,
சமரசம் இல்லாமல்,
சடங்குகள் இல்லாமல்,
சறுக்கல் இல்லாமல்,
சங்கமிக்கவிடு,
சாதூறியனே!
சரவணனே,
சலனம் இல்லா,
சலங்கொலி சத்தம் கேட்டு,

சன்யாசியாக.

ஓம் நமசிவாய.

# 73. வலியவனே

உன் குலம் சேர
எண்ணம் வருகையில்,
குலம்பி போகும் வண்ணம்
மனம் மாறியது ஏனோ?
சோதனை நீ செய்யினும்,
சாதனை செய்ய
நீயே வேண்டும் என,
வேண்டும்,
இந்த அற்பணுக்கு அருள்புரிய வா.

உன் திருவடியன்று
வேறொரு நினைப்பும்
அற்ற நிலைக்கு
சேர்த்திடு போதும்.

வலியவனே,

வலியில் இருந்து
என்னை மீட்டு,
உன்னை சேரும் வழியில்
நடத்திட வா.
வா, வா, வா,
இறைவா!
உன்னையன்று
வேறொரு நினைப்பும்
அகற்றிட வா.
ஆசை அழித்து,
உன் நாமத்தை
நான் ஒலிக்க,
அதிரும் அங்கமாக
நீயே எங்குமாக.

ஓம் நமசிவாய.

74. அ

அன்பே, அறிவே, அழகே, அற்புதமே, அதிசயமே,
அஞ்சானே, அளவே, அறவே, அசைவே, அச்சே,
அரசே, அணியே, அனையே, அங்கமே, அடியே,
அப்பா, அம்மா, அன்னையே, அண்ணனே,
அரிசியே, அழிவே, அலையே, அய்யா,
அவரே, அனைவே, அருவியே, அடையே,
அபாரமே, அனேகன், அணிகலனே,
அர்ச்சனையே, அருமயே,
அம்பலமே, அனுவே, அனுபவமே,
அணியே, அங்கமே,
அன்னமே,
அன்பே.

ஓம் நமசிவாய.

## 74. தமிழே

அழியா

ஆசையை

இழைக்கும்

ஈசா,

உயிராய்

ஊடுருவி

என்னத்தில்

ஏக்கம் அளித்து

ஐய்யம் போக்கும்

ஒய்யார

ஓசையான

ஔடதமே.

ஓம் நமசிவாய.

# 75. யார்?

யார் இறைவன்?
என் துணைவன்.
யார் இறைவன்?
என் தலைவன்.
யார் இறைவன்?
என் செல்வன்.
யார் இறைவன்?
என் கள்வன்.
யார் இறைவன்?
என் மன்னவன்.
யார் இறைவன்?
என் மாணவன்.
ஆருதலே,
மாருதலே,
மறுத்தளே,
கூரா மாமுனியே!

என்னை உரித்து,

உரிக்கும் போது,

அந்த வலியை மறைத்து,

உள்ளே வெட்டி

ஞாணத்தை ஊட்டி,

பரஞ்சோதிக்கு

பக்குவமாக பத்திரப்படுத்தும்

பரம்பொருளே.

# 76. எண்ணவனே

எண்ணவனே,
என்னில் உள்ளவனே,
என்னில் அடங்கா,
எங்கும் உன் இருப்பாள்,
என்றும் என்னுள்,
எண்ணையாய்,
திரியாய்,
ஜோதியாய்
ஆண்டவனே.

ஓம் நமசிவாய.

# 77. என் ஆயா

அறியா,
தெறியா,
புரியா,
குறையா,

பிரியா,
சிரையா,
வரையா,
கரையா,

முறையா,
உரையா,
கறையா,
பிரையா,

நிறையா,

நுரையா,
நறையா,
திரையா,

இறையா,
கூறையா,
கூறைய்யா,
அய்யா,
விழியா,
வழியா,
அலையா,
பாதையா,
பேதயா,
அம்பலவாயா,
திருவாரூர் அய்யா,
என்னுள் வாயா,
என் ஆயா,
பராமயா,

# 78. தூயவனே

என் ஆண்டவனே,
அனைத்தையும் அழித்து,
அணையாமல் வைத்திருக்கும் என்னை
உன் அனைப்பை அளித்திட,
அண்டத்தில் இருந்து விடுபட,
உன்னை மட்டும் வழிபட,
பிறவா பிறவி பிறந்திட,
அடியேன் உன் அடியில் இடம்பெற,
தூயவனே,
உன்னை துதித்திட.

ஓம் நமசிவாய.

# 79. அரும்பொருலே

வேண்டாதவனாய்,
பற்றை அற்று,
என்னை இழக்க,
நினைவே நீயாய்
என்றும் இருக்க,
வேண்டா இருந்த நொடிகளும்
ஒரு சேர,
ஒன்றே சிவம்,
அவனே தவம்,
அருகதை அகற்றி,
அருகினில் அணைத்த,
அரும்பொருலே,

ஓம் நமசிவாய.

# 80. சிவத்திலே

அரவணைத்த ஆண்டவா,
அன்பு அறியாமல்
அலப்பறை செய்தேன்,
இன்பம் கண்டு,
ஈசா,
உனை உணராதிருந்தேன்.
ஊரைவிட்டு
எங்கோ சென்றபின்,
ஏக்கம்,
ஐய்யா,
ஒருமுறையேனும்
ஓம் நமசிவாய எனும்
ஔடத
ஔதசியம் வேண்டி,

ஔவையாராக என்றும்

சிவத்திலே,

ஓம் நமசிவாய.

# 81. பித்தாய்

சிவனே
நோக்கம் அற்ற நிலையில்,
நொந்திருந்த மனதில்,
கடந்த பாதையில்,
கண்டும் காணாமல் போனதை,
உணர்ந்த நொடியில்,
மொட்டில் பட்ட
வெளிச்சம் மலர,
அதை உயிற்கள் நுகர,
மகரம் நகர
காரணம் இன்றி,
இன்றும் சுழலும் கோல்கள்,
புரிதல் ஒன்றே
இல்லை என புரிய,
உனை அறிய,
பல பிறவி எடுக்க,

பிறை சூடிய பித்தா,

பித்தாய் நான்

பிதற்றித் திரிந்தேன்.

உயிர் பிரியும் முன்,

உன்தன் முன்,

பிரியா இருக்க,

பிரியப்படும்

மந்திரம்

ஓம் நமசிவாய.

# 82. ஓர் அடி

நன்றி சொல்ல நாதனே
நல்கிடு நடராஜனே,
பேரும் புகழும்,
உலகும் அகிலும்,
பொற்பாதம் காண,
உள்ளம் மகிழும்.
உயர்த்திவிட்ட ஆண்டவா,
உயர் திருவிடம் அருளிடவா.
ஓர் அடி,
ஒரே அடி,
திருவடி.

பொற்பாதம் பணிந்து,
அனைத்தும் மறந்து,
உனயே நினைந்து,
ஓம் நமசிவாய.

# 83. அரங்கேற்று

நீ எனக்கு குடுத்தது போதும்
நான் உனக்கு
என்னை தர வேண்டும்.
வேண்டுதலுக்கு செவிசாய்த்து,
இந்த நாடகத்தை
அரங்கேற்று,
ஆண்டவனே,
நடராஜா,
ஓம் நமசிவாய.

# 84. வாழ்த்து மடல்

அன்பான
ஆண்டவனே,
இன்சொல்
ஈசனே,
உறுதியான
ஊன்றுகோலே,
எளிமையான
ஏணியே,
ஐம்பூதமே,
ஒருவனே,
ஓங்காரமே,
ஔடதமே,

வாழ்த்து மடல்:
உன்னை வாழ்த்தும் மடலாய்,

இனிய புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்!

புவியாலும்,

நமசிவாயமே

ஓம் நமசிவாய.

# 85. நிரைவா

என்ன இது ஆண்டவா,

பிறரையே கண்டு கொண்டிருக்கும் என்னை,

பிறையை காண

செய்திட வேண்டும்.

வேண்டும் என்றே

வெறுப்பை தூண்டாமல்,

இந்த இருப்பை

திரியாய் எரித்திட வேண்டும்.

மற்றவர் செயலில்

மனதை செலுத்தாமல்,

மன்றியிட்டு

உன் முன்

மந்திரம் கூற வேண்டும்.

நல்லவர்கள், தீயவர்கள்

என யாரையும் எடையிடாமல்,

உன்னிடம் மட்டுமே இருந்திட வேண்டும்.

இறைவா, நிரைவா,
நீயே அனைத்துமாய்
ஆகிட வேண்டும்.

ஓம் நமசிவாய.

# 86. கூட்டிச் செல்

பரமேஷா, பரம்பொருளே,
என் ஜீவன்,
என் உயிர்,
இந்த உடல்,
என் ஆயுள்,
அனைத்தும் நீயே.
உன்னை அன்றி
எனக்கென்று யாரும் இல்லை,
அரசே.
ஒவ்வொரு உறவும்
ஒன்றுடன் ஒன்று
ஏதேதோ எதிர்பார்த்து
உரசிக்கொள்ளும்
இந்த நறக வாழ்க்கையில் இருந்து
என்னை மீட்டெடுக்கும் அய்யா.

என் ஈசனே,

பணம், புகழ்

என அர்த்தமில்லா விஷயங்களில்

பின்தொடரும் நானும்

என் சுற்றமும்

எல்லாம் விட்டு

உன் பின்னே

வர வேண்டும்.

உன் பாதம்

தொழ வேண்டும்.

என் இதயமே,

என் இன்பமே,

என் தெய்வமே,

கூட்டிச் செல்,

ஆண்டவா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

# 87. மணிமாடம்

சுத்தி சுத்தி வந்தேன்,
சுத்தி சுத்தி திரியிறேன்.
சுத்தும் பூமியில,
சுத்தமில்லாமல் இருக்கேன்.
சுத்தவிட்ட ஆண்டவா,
என்னை சுத்தப்படுத்தி
எடுத்துக்கவா.
ஈசனே, பரமேசனே,
அறிவுகெட்ட மடத்திற்கு
மணிமாடத்தின் அருள் விளங்குமா?

எண்ணெயை மாத்து,
என் சிந்தையை மாத்து.
உன்னை ஏத்து,
உன் அருளிலே திளைத்து,
தில்லை அம்பலத்தில்

தீயன இழந்து,

நல்லதாய் புகுந்து,

உன் பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 88. எனக்கு வேணாம்

எப்போ நீ என்ன
கூப்பிட போற?
எப்போ என் கண்முன்னால
நீ மட்டும் இருக்க போற?
எதையோ
என் கண்ணு பாத்துட்டு இருக்கு,
அதையெல்லாம் மாற்றி
உன் காட்சியை மட்டும்
என் கண்முன்னாடி
கொண்டுவர வேணும்.
உன்னையே எந்நாளும்
நான் வணங்கிட வேணும்.
நீ இல்லா வாழ்க்கை,
நீ இல்லா நிமிஷம்
எதுவும் எனக்கு வேணாம்.

நீதான்,
நீதான் என்ன முன்னே
இருக்கே வேணும்.
உன் திருவடி சரணடைய
நான் முழுமை அடைய
உன்னிடம் என்ன எடுத்துக்கோ,
ஆண்டவா.

ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய.

# 89. அண்ணாமலை

அண்ணாமலையனே,
உன் அருமை தெரியாது,
உன் பெருமை தெரியாது.
உன்னை காண வேண்டும்,
அண்ணாமலையில்
நான் வரவேண்டும்.
ஏன் என்று தெரியாது,
தெரிய வேண்டிய
அவசியமும் கிடையாது.

என்னை கூட்டி செல்,
என்னை எடுத்து செல்,
உன் பொன்னடி காண,
உன்னை நான் காண,
உன்னை நான் உணர.
தீப ஆராதனையில்

உன் முகம் காண,
என்னை கடத்தி செல்,
இறைவா.

ஏகப்பட்ட தடைகள்,
எக்கசக்க தொடர்புகள்,
அனைத்தும் அறுத்து
தாண்டி
உன்னுடன் நான் வர.
அருளிடு ஆண்டவா.

அண்ணாமலையனே,
அன்னையும் உன்னையும்
இரு கண்களின் வழியே
மனசில் கண்டு
கை கூப்பி
உன் பாதம் பணிய வேண்டும்.
காட்சி கொடு,

சிவனே.

என் கண்ணீர் துடைக்க வேண்டாம்;
அந்த கண்ணீரில்
உன்னை அலங்கரிக்க வேண்டும்.
ஆனந்தமே,
அதிசயமே,
அலட்சியமான அற்பனுக்கு
அன்பளித்த
இன்பமே.

உன் ஊரில் என் பாட்டு
எதிர்பார்ப்பில்லா
பெருமை பெற்று,
பொக்கிஷமே

பரம்பொருளே.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 90. சிவா ஞான கதிரேசனே

ஈசனே,
என்னை ஆளும் நேசனே,
சிவநேசன்,
சிவா ஞான கதிரேசனே.
என்னை சுற்றி
நடப்பவை யாவும்
யோகனே,
உன்தன் விளையாட்டாய்.

விதியின் வசம்
சேர விடாமல்
காத்தித்துடு, அய்யா.
உன்னை அன்றி
எதையும் நான்
யோசனை கூட செய்யாதவாறு

பார்த்துக்கொள்ளும், அய்யா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 91. நினையா வாறு

ஒன்றுமே புரியவில்லை,
என்ன அடுத்து
என்று தெரியவில்லை.
ஊடுருவும் பயம்
எதற்கென்று விளங்கவில்லை.
என்ன தேவை,
எதற்கு தேவை,
எதுவும் புலம்படவில்லை.
உன்னை அன்றி
இதை உணர யாரும் இல்லை,
ஈசனே,
உன்னை அன்றி
வேறெதுவும் நினையா வாறு
காத்துக்கொள்ளும், அய்யா.

ஓம் நமசிவாய,

# 92. உன் திசை நோக்கி

ஒன்றுமே இல்லை
யோசித்து பார்க்கையில்,
விஸ்வரூபம் கண்ட நாள் முதல்
அர்த்தமுள்ள பாதையில்
அழைத்து சென்ற இறைவா.
பிறந்த வீட்டிற்கு விடையளித்து
உன் திசை நோக்கி
மனை அமைத்து
மனதில் குடிவந்த பெருமானே.
புதுமனை மேல
ஆசை புகாமல்
ஆசை என்பதே
அடங்காத அசுரன்.
அதை அடக்கி ஆள்வதே
பரம ஈஸ்வரன்
என்பதை உணர.

சந்தர்ப்பங்களை

கவலைகள் கஷ்டங்கள்

என்னும் சக்கரை பாகில்

ஊறவைத்து உருண்டையான இனிப்பாய்

ஊதி உள்ள என்னை

அப்டியே விழுங்கிக்கொள், இறைவா.

இன்னும் கொஞ்சம் பாசமா தேடும் மனதிற்கு

மோசம் செய்ய வேஷமிட்டவர்களின் முகத்திரை

விலக கண்டேன், இறைவா.

ஈஷா எல்லாமே ஒரு வேஷம்

இந்த நாடகத்தில் என் கதாபாத்திரத்தின்

முக்கியத்துவத்தை குறைத்து

உன் முன்னே

என்னை நிறுத்து.

என் நாவில் என் நாளும்

உன் நாமம் பஞ்சாச்சரம் கூற வேண்டும்.

பஞ்சமில்லாமல் தாய்மொழியில்

உன் புகழ் பாட வேண்டும்.

உன் திருவடி தொழவேண்டும்,

இனியவன் தூயவன்.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

## 93. கண்ணீர்

கண்ணீரின் காரணம்

நான் என எண்ணி,

வீணாய் போன நேரம்.

கண்ணின் ஓரம் ஈரம்

மறையாமல்

அதை மாற்ற வரும் எண்ணம்.

அநாதை என்பதால் அல்ல;

ஆனந்தமாய் கண்ணீர் மல்க.

ஆண்டவனே, உன்னையே எண்ணி

அனுதினமும் உன்னை ஆராதனை பண்ணி,

அனைத்தும் இழந்து உன் முன் தவழ்ந்து திரிய.

உன் பொற்பாதம் உணர,

உருவாக்கிய என்னை

உருகுலைத்திடு, இறைவா.

என் நாளும் என் நாவில் நின்றாடும்

உன் நாமம்

பஞ்சாச்சரம் போதுமே.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 94. மகரந்தம்

பேசக்கூட தெரியாது,

ஒழுங்காய் பேசக்கூட தெரியாத என்னை,

கவிதையாய் கூற;

அதிலும் நீயே வார.

அடடா! என்னென்ன அதியசயம் நிகழுவதை

உணரும் அறிவு தந்து

இதை பாடலாய் உரைக்க செய்து.

ஆச்சர்யம் அடங்கிய அழகான நிகழ்வுக்குள்

என்னை வைத்து.

மலரில் உள்ள மகரந்தம் நான்,

அதனின் உள்ள தேன் துளி நீ,

தேனீ உறுஞ்சயில் தான்,

உன் தித்திப்பு தன்மை உணரும் போல,

பிரச்சனை இன்னல்கள் இடிக்கும் போதுதான்

உடுக்கை அடைக்க உன்னையே துதிக்க,

வரமாய் உன்தன் அருளை பெற்று,

உன்னருளாலே உன்னை தொழும்

நான் என்னும் நீ.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 95. திருப்பாதம்

திருஅண்ணாமலையனே,

உன் திருப்பாதம் போற்ற,

உன் பொன்னடி நீ காட்ட.

உன்னிடம் நான் வர வேண்டும், அய்யா;

புனித பூமியான திருவண்ணாமலை வரணும்.

உன்னை தோழனும், நிம்மதி பேரனும்

பேரன்பு தரணும், அய்யா.

திருவண்ணாமலை, திருவாரூர், சிதம்பரம்,

காளகஸ்தி, ராமேஸ்வரம்,

வரணம்

உன்னுடன், உன் முன்,

பாமரனுக்கு அருள் புரி.

எப்படி, எதற்கு, எவ்வாறு என தெரியாது;

உன்னால் எல்லாம் முடியும்.

நீ அனுமதித்தால் எல்லாம் நிகழும்;

உன் அருளால் எல்லாம் சாத்தியமே.

இதை சாத்திய படுத்த

என் பக்குவம் போதுமா என்பதே மாயமே.

இறைவா,

சுற்றி நிகழும் யாவும்

என்னை கூறு போடுகின்றன.

இன்னும் இந்த உசுரு

என் உடம்பில் உள்ளதற்கு காரணம் நீயே;

அதையே காரணம் ஆக்கி நான் நகர்கிறேனே.

என்னுடன் வா,

உன்னுடன் நான் வாழ;

அருளிடு, ஆண்டவா.

எல்லாம் விட்டு உன்னை மட்டும்

என் சிந்தையில் நிறுத்திடவை, இறைவா.

வலிகள் போதும், வலிக்குது, அய்யா;

விலகி நின்று விளங்க வைத்தது போதும்.

என் விளக்கை ஏற்று;

ஒளியாய் நீ வாரும், அய்யா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 96. உன்னை சரணடைந்தேன்

உன்னை சரணடைந்தேன்,
என் இன்பமே;
எல்லாம் அறிந்தும், அருளும் புரிந்தும்,
இன்னும் உன்னை பிரிந்து
இங்கு நான் இருப்பது ஏனோ?
நல்லது என நாசமும்;
கெட்டது எல்லா வேஷமும்;
பாசம் என்னும் மோசத்தால்
தொலைந்த மோட்சத்தை தேடுகிறேன்,
இறைவனே,
கண்டெடுத்து தா;
கண்டது பின்னால் ஓடும் என்னை.
கண்கண்ட தெய்வமே,

உன்னுடன் என்னை இருக்க வை,

அய்யா.

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய,

ஓம் நமசிவாய.

# 97. உணர்ந்து

எதுவும் தெரியாது;
எதற்கு என்றும் தெரியாது.
ஏற்பாடு இன்றி,
எதிர்பார்ப்பு இன்றி;
ஈற்பினால்
ஏற்பட்ட பயணம்.
என்னவன்
என்பவனின்
ஏற்பினால்;
எதுவும் நினையாமல்,
என்னையும் மறந்து,
உன்னையே உணர்ந்து
உருவாக்கிய உன்னுடன்;
ஏக்கமுடன்
ஊக்கம் தாண்டி
உண்ணாமலயனை

திருவண்ணாமலை

அடைந்து

அடைக்கலம் புகுந்தேன்.

ஏற்றுக்கொள், இறைவா;

ஈஸ்வரா, இன்பமே, ஈகையே அனுவே, அசைவே.

ஓம் நமசிவாய.

# 98. பரமேஸ்வரா

பாவத்தின் பாவம் நான்;
பவித்திறதின் பவளம் நீ.
பதிகம் படிக்கும் பாக்கியம் தந்தெனக்கு,
தாய்ப்பாலின் பரிசுத்ததின் மேலோன்
என உணர்ந்தபின்னும்;
ஐம்புலனின் ஆதிக்கத்தில்
அகபட்டு இருப்பது ஏனோ.
எங்க இந்த ஆசைக்கிரங்கி
உன்னிடம் இருந்து தூரம் போவேனோ?
துறத்திவிடாதே, அய்யா.
இரத்த உறவுகள் அற்று எஞ்சிய உயிருக்காக
வாழும் வாழ்வில் வாணவில்லாய் வந்த நீயே,

உன் வண்ணம் கண்டு பரவசம் கொண்டு

இழந்த யாவும்

இன்பனை நோக்கிய பயணம்

என தேத்திக்கொண்டு நகர்கிறேன்.

இடையூறாக வரும் காம எண்ணமும்

ஆசை அஞ்சலிலும் அகப்படாமல் காத்திடு, அய்யா.

உன்னை சேர, உன் அனுமதி வேண்டி;

அதுவரை நீயே அருளிடு, அய்யா.

பரமேஸ்வரா.

ஓம் நமசிவாய.

# 99. சிந்தையே நீயாக

நீ தந்ததெல்லாம்

இறைவா, நிறைவா, நீ தந்ததெல்லாம்;

தகுதி இன்றி பெற்ற நான்.

தரம் கெட்டு தலைகீழாக

தகாத செயல்கள் செய்வது ஏனோ?

காரணம் இன்றி கண்ட வலையில்

சிக்கினால், நீரின்றி வாடும் மீனாய் ஆவேன்;

என தெரிந்தும் நான்

வலையில் விழுந்து துடிப்பது ஏனோ?

உன்தன் காட்சி கண்ட பின்னும்,

உள்ளுக்குள் உன்னையே உணர்ந்த பின்னும்,

சிந்தையில் நீயெனில்

சிந்தையே நீயாக இருக்கையில்,

இருக்கைகளும் உன்னை வணங்கும் வேலை

தவிர்த்து தவறு இழைப்பது ஏனோ?

புரியாத கேள்விக்கு

பதில் வேண்டி இந்த பாடல் இல்லை;

வினாவான என் வாழ்க்கைக்கு

விடை குடு என்னும்

கோரிக்கையே

கோர்வையாக வார்த்தைகள்

உன் நாமம் பாடவே வேண்டும்.

உன்னையே அனுதினமும்

நான் நினைந்திட வேண்டும்.

பரமனே,

பரமேஸ்வரனே,

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

# 100. திருவண்ணாமலை தரிசன உணர்வின் பகிர்வு

லிங்கமே, அழகு தங்கமே;
உன்னையே காணவே
ஓடி வந்தேன் நானாவே.
என்றுமே உன்னையே
எண்ணியே எப்பொழுதும்
நானுமே இருந்திடத்தான் வேணுமே.
எண்ணிய யாவும் நிகழ்ந்திட செய்து
சஞ்சலமும் சலசலப்பும் இன்றி
உன்னையே
நீ காண செய்து;
கண்கள் நிரம்ப உன் காட்சி தந்து
உன் முன்னே என்னை நிறுத்திய இறைவா.

குளித்து நானும் கோவிலுக்குள் வர வேண்டும்;

மழையால் என்னை குளிக்க வைத்து நீ அழைத்து

உனக்கு வில்வம் நான் தரவேண்டும்;

எனக்கு வில்வம் மாலை அணிவித்து

நெற்றியில் சந்தனம் இட்டு,

காலை உணவாய் உன் பிரசாதம் தந்து,

கையில் கயிறு கட்டி,

கார்த்திகை அன்று மட்டும் கிடைக்கும்

மையை எனக்காக பக்குவ படுத்தி வைத்து

அதை பக்குவமாய் என் மனம் வாடும் நேரம்

அதை அளித்து உருகும் நேரத்துல;

மைய புள்ளியில் நீ ஆடிய நடன கோலத்தில்

காட்சி தந்த நடராஜரே.
காமதேனு காட்சியும்
அண்ணாமலை அன்பும்
உண்ணாமலை தேவியின் குங்குமமும்;
உன்தன் புகைப்பட பிரசாதம்,
மந்திர திருநீறு,
மயக்கும் மா மலை,
லிங்க தரிசனம்,
உன்தன் அருள் அதனின் பொருள்,
நந்திதேவன் ஆசி,
மரகத லிங்கம்;
மறவா எண்ணமுடன்
உன் திரு நாமம் கூறியே
உன் திருப்பாதத்தில் வாழ
வாழ்த்திடு ஐயா.

ஓம் நமசிவாய;

# 101. ஓர் இடம் வேண்டல்

சுற்றி நடக்கும் தூண்டுதலால்,
பற்றி எரியாமல்
உன்னையே பற்றி
உன் நாமம் என்னும் ஜோதி மட்டும்
என்னுள் எரிய அருளிடு, இறைவா.

காமம் என்னும் காட்டேரி
கரைந்து மறைந்து
உன்னுள் நான்,
என்னுள் நீ என்று மட்டும்
ஓர் உறவு வேண்டும், இறைவா.
எல்லா பற்றும் அறுத்து
இந்த ஓட்டத்தை நிறுத்து.
கேட்கவைப்பவனும்,
கேட்பவனும்,
கேட்டபின்னும்,

கேட்கும் முன்னும்;

தேவையை அளவாய் அளிப்பவன்.

ஆசை என்னும் யானையை
தோலுரித்து
இந்த உடம்பை விடுத்து
உன் திருவடி நாடி
உன்னுடன் நான் இருக்க
ஒரு இடம் கொடு,
இறைவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 102. பயம் எதற்கு?

சூழ்நிலையாவும் சாதகமாக இல்லாவிடினும்,

நில்லாமல் உச்சரிக்கும் பஞ்சாச்சரம்.

நிலையான பாசம் தரும் உன்தன் மனம்;

உள் உணர்வாய் உன் சிரம்,

கண்ணீர் துடைக்கும் உன்தன் கரம்.

ஈன்றெடுத்த தாயின் குணம், சிறிதெனில்

ஈர்த்தெடுத்த என் சிவனின் குணம்;

பெரிதினும் பெரிது.

கவலை களைந்து,

என்னை நான் மறந்து

சிவமயத்தில்

மாய யுகத்தில் இருந்து விடுபட செய்யும்;

தப்புக்கள் என்னை தடம் மாற்றினும்,
குற்றங்கள் என்னை கூறு போதினும்.
என் அப்பன் சிவனை போற்றும் நாவும்,
அவன் நினைவை போற்றும் மனமும்,
எந்நாளும் என் நாவில் நின்றாடும்
உன் நாம பஞ்சாச்சரம் இருக்க.

பயம் எதற்கு?
பாசம் அறுத்து
பயம் விடுக்கும்

பஞ்சாக்சரம்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 103. பக்குவ படுவது

என்னவா!

என்னவா இருந்தாலும்,

ஓம் நமசிவாய என்னும் பஞ்சாச்சரம்.

கூறையில் உண்மை விளங்குது;

கிடைக்காதது,

தேவை இல்லாதது.

வருத்தம் வருவது,

பெரிதாய் வருவதை சிறிதாக்குவது;

பெரிதாய் வந்தது,

பக்குவ படுத்துவது.

எல்லாம் உன் செயல்;

உன்னை போற்றி பாடுவதே என் செயல்,

அதுவும் உன் அருளாலே.

பாக்கியம் தந்த இறைவா,
பாக்கியை முடித்து
கூட்டிசெல் என்னை;
உன் திருவடி தவிர
ஒதுங்க எனக்கு இடம் ஏதும் வேண்டாம்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 104. சிவனடியாராய்

எதற்கும் தேறாமல்,

எதிலும் சேராமல்,

சேற்றில் சிக்கி அழுகி உள்ள என் மனம்;

அதில் உன் மனம்,

இறைவா,

சுத்தப்படுத்த

சூத்திரமாய் சிவபுராணமும்,

பஞ்சாச்சரமும்,

இடைவிடாமல் கூற வாய்ப்பு குடுத்த ஆண்டவா.

இனி எந்த ஒரு அழுக்கும் சேராவாறு,

அரனாய் இந்த நாயை காத்துக்கொள், அய்யா.

ஈசனே, என் பரமேஷனே, என் அப்பாவே,

என் ஆண்டவனே, ஆட்டுவிக்கும் ஆண்டவா.

சிவதாண்டவா இந்த சிறையை உடை, இறையே.

உன்னிடம் நான்,
உன் நாமம் கூறி,
நான் உன் திரு பாதத்தில்,
செயலற்று சிந்தனை அற்று
உன்னையே போற்றும்
சிவனடியாராய் இருக்க.
அருளிடு ஆண்டவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 105. ஆசான்

தோல்விகள், ஏமாற்றங்கள் என,

எக்கச்சக்கமாய் நிறைந்திருக்கும் என் வாழ்வில்;

தோல்குடுத்து ஏற்றிவிடும் ஏகலைவா.

ஒட்டாமல் இருக்க கற்றுகொடுத்து,

உன்னுடன் ஒற்றி இருக்க கற்பிக்கும்

ஆசானே,

ஆனவனே,

ஆயுளே.

ஆசை அளித்து,

உனையே எனக்கு அளித்து,

எண்ணில் நீ;

உன்னில் நானாய்,

நாள் தோறும் நாவில்
பஞ்சாச்சரம் மலர செய்த
என் தூயவனே.

உன்னை அன்றி,
உன்னையே அன்றி வாழும்
இந்த சிறியேனையும்
சிறப்பாய் காக்கும்
கடவுளே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 106. பரமாநந்தமே

எதிர்பாரா பற்று,
என்னை நீ ஈர்த்து;
புவிஈர்ப்பு பிடியில் இருக்கும் என்னை
அண்டம் ஆளும் ஆலகாலா,
உன் அறைவனைப்பில் அழைத்துக்கொண்டதற்கு
என்னே புண்ணியம்,
நான் செய்திடல் வேண்டும்,
ஒன்னும் இல்லா என்னை;
ஒன்றாய் நன்றாய் நீ இருக்கையில்
என் இரு கையில் உன்னை பற்றி கொள்ள.

ஒரு நாளும் உன் நாமம் சொல்ல
தவறா நாவும்;

அதில் நீயே நின்றாலே
ஆனந்தமே,
பரமாந்தமே;
என் பாடலில் நீ ஆட.
அருளை நீ மாலயாய் ,
என் வரியாய் தார;
தாயே, அம்மையப்பா,
ஈஸ்வரா, பரமநாதனே,
பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 107. அனாதையாய் நான் இல்லை

ஆனந்தனே, அனாதையாய் நான் இல்லை;

ஆதரவாய் அம்பலவாய நீ இருக்கையில்,

வருத்தமாய் நான் இல்லை;

வைரநாதா, நீ இருக்கையில்

வறுமையில் நான் இல்லை;

வாஞ்சி நாதா, நீ இருக்கையில்.

ஏழையாய் நான் இல்லை;

ஏகாம்பரா, நீ இருக்கையில்.

எதிர்பார்ப்பின்றி, ஏமாற்றம் இன்றி,

உன்னையே நான் தினமும் அன்றி

பஞ்சராட்சரம் பாடி

பரவசத்தில் ஆடி;

ஆடல் அரசே,

எந்தன் சிரசே;

உன்தன் திருப்பாதத்தில்

சிவநாமம்,

சிவபுராணம்,

சிவவாக்கியம்,

சிவம்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 108. என் ஜீவனே

சிவனே, என் ஜீவனே;
ஆட்டம் நிறுத்தி,
என்னுள் உன்னை நிறுத்தி.
நீயே என் வலி,
நீயே என் ஒளி;
உன்னை அன்றி வேற எதுவும்
என்னமாய் கூட வாராவாறு.
பார்த்துக்கொள், அய்யா.

ஈசனே, பரமேஷனே;
காத்திருக்கும் நேரம்
தூரமாய் தோன்றுது, அய்யா.
ஏற்றுக்கொள் என்னை, இறைவா.

உன்னை பாடி,
உன் நாமம் கூறி,

உன் திருப்பாதத்தில் தொழுதிட வை,

ஆண்டவா.

தாயுமான தந்தையே.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

## 109. ஆனந்த கண்ணீரே

கடத்திச்செல்லும் நேரம்;
கடந்து செல்லும் நானும்
கைப்பிடி இல்லாமல்
காற்றாடி போல் சுற்றிவிட்டால்,
சுழன்றுவிட்டு ஏறுவதாய் எண்ணி
எக்குத்தப்பாய் விழும் வாழ்க்கை.

வாழும் என்னை
என்னமாய்
எங்கும் தோன்றி
என்னை அழைத்து,
கண்முன் காட்சி தந்து,
தத்துவமாய் தோன்றிய தெய்வமே;
லிங்கமாய், நடராஜராய்,

சாதுவாய், சாமானியனாய்;

சங்கரனே, ராமநாத ஸ்வாமியே,

கேதார்நாத் பாபாவே.

ஞான லிங்கமே,

ஜோதி லிங்கமே,

அண்ணாமலையாரே;

திரு நீல கண்டா,

ஆனந்த கண்ணீரே.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 110. எனக்கானவனே

எனக்கானவனே,
என்னுள் இருப்பவனே;
சுற்றி நடக்கும் யாவும்
எதை நோக்கி நானும்
கூட்டி செல், இறைவா.

பாதம் பணிந்து பாவை பாடி,
பாத மலராய் நான்;
என் நாளும், என் நாவில்
நின்றாடும் உன் நாமம்
பஞ்சாச்சரம் போதுமே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 111. மாயவன்

அன்னையும் தந்தையும் விநோத உறவாய்,

உடன் பிறந்தவர்கள் உலகுக்குக்காணவர்களாய்.

உண்மை விலங்கையில் விலங்காய் மனம்,

மாற மந்திரம் கற்பித்து மயக்கிய மாயவன்.

என் மன்னவனே, மண்ணில் இருக்கும் என்னை

மாடம் நோக்கி காண வைத்து,

அத்துணை துளைவில் நீ இருந்தும்

துணையாய் இருக்கேன் என உணர்வை தந்து.

துளசி புனிதம், நீ

தூசியில் அடைபடாமல்

என்னை துடைத்து;

தூயவனாய், துன்பம் கலையவைத்து,

தூக்கி நிறுத்திய இறைவா.

உன் முன் நான் வர, அருகாமையில் நீயே

என் சுமைதாங்கியாய்,

என்னையும் சுமந்து.

என்ன புண்ணியம் செய்தேன், இறைவா

உன்னை உணரவைத்த

இறையே;

ஓம் நமசிவாய.

நினைக்கும் முன் வருகிறாய்,

கேட்கும் முன் தருகிறாய்.

இனி கேட்பதெல்லாம் உன்தன் முன்

நான் உன்னையே தொழ வேண்டும்;

அதற்கு உன் அருள் வேண்டும்

உன்னவனாய்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 112. அருணாச்சலேஸ்வர

அண்ணாமலை ஈஸ்வரா,

உன்னை காண உன்னிடம் கேட்டேன்.

என்னை நீ கூட்டிச்சென்று

என் பாவங்களை கழுவி

உன் தரிசனம் தந்து

மனம் குளிர வைத்து

நடராஜர் ரூபத்தில்

வழியனுப்பி வைத்தாய்.

என்னே, புண்ணியம் செய்திருக்க வேண்டும்,

இறைவா.

உன்னை அன்றி,

என்னால் ஒரு செயலும்

செய்ய இயலாது, இறைவா.

என் பரம்பொருளே, என் ஜோதியே,

அருணாச்சலேஸ்வர!

நடந்த யாவும் நிஜமா?
கனவா என உணராவண்ணம்
உணர்த்தும் நினைவுகள்,
உன்னை மறவா மனம்,
வேறு எதுவும் நினைய மனம்.

உன்னையே அனுதினம்
துதிக்கும் மனம்.
திருப்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 113. மாறா

நீ இருக்கையில்
என் இரு கையால்
உன் இருக்கையை
இறுக்கி அணைக்க வேண்டும்.

இந்த பிறப்பையும் வரும் இறப்பையும்
அதுவரை என் இறை பையையும்
நான் மறந்திட வேண்டும்.

இறை உரை நான் வழங்க,
நீ அருளிட வேண்டும்.
நிறை குறை பாரா,
என்றுமே என் மாறா,
உன்னை நினைந்திட

வேண்டும்.

இதுவரை எது குறை?
உன்னை நினைய நேரம் அனைத்தையும்
நீ எனக்கு அளித்திட வேண்டும்.
அனைத்தையும் சேர்த்து
உன்தன் புகழை நான் உறைய வேண்டும்.

உள்ளம் மகிழ, உன்னை பாடி
ஒவ்வொரு நொடியும் உன்னை தேடி.
உலகம் முழுதும் உன் கால் அடியாய்
நானே உன் தேர் பிடியாய்
இருந்திட வேண்டும்.

பஞ்சராட்சரம் என்னும் மந்திரத்தால்

உலகோர் வழியாய் போங்கிட வேண்டும்.

வலியை மறந்து உன்வழியில் நாங்கள்

நடந்திட வேண்டும்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 114. அரும்பொருள்

சிவமே, எதிர்பார்ப்பில்லா அரும்பொருள்,

எல்லை இல்லா இன்பமே.

எதுவும் இல்லா அழகு தங்கமே.

ஏழ்மையிலும் ஏழையாய்,

கீழ்மையிலும் கீழ்மையாய்.

பொய் ஒளித்து, மெய்தரும்,

பிரையன்.

குறையில்லை குசேலா,

திருவிளையாடும் தெய்வீகமே.

ஒரு நொடியில் அதுவும் எதுவும் செய்யும்,

மாயனே.

திசை இல்லா தீட்சனே,

என் ருத்ராட்சமே.

உன் பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 115. புனிதன்

தவறாய் செய்த செயலை,
தவறாமல் செய்யும் நான்;
தப்பு என்று தெரிந்தும்,
தடுக்காமல் தொடரும் நான்.
கெட்டியாக உன்னை பிடிக்க,
கெட்டிக்காரனாக நான் தவற;
கெட்டசெயல்கள் கெட்டியாக
என்னை பிடிப்பது ஏனோ.

சிந்தையிலே உன்னை வைத்தேன்,
செயல் என்னவோ செய்கிறேன்;
செய்த பின்பு வருந்தும் மனம்,
செய்யும் முன் செய்யும் பொழுதும்,

வருந்தா இருப்பது ஏனோ.

புனிதமான உன்னை நெஞ்சில் வைத்து,

புகழை தேடி நான் வெளியே அலைவது ஏனோ.

கேள்வியின் நாயகனான,

உன்னிடம் கேள்விகள் நான் கேட்பது ஏனோ;

என்னிடம் விடை இல்லாதால்,

விடை குடுக்க.

உன்னை வேண்டும்;

அன்புள்ள பக்தனாய் மாற வேண்டும்;

கேடுகெட்ட ஓநாய்.

உயிருடன் இன்னும் இருப்பது,

உன்னை துதிக்கவே

உன் பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 116. ஜோதி

கூட்டிசெல் உன்னுடன் என்னை;
எண்ணெயாய் நான் உருக,
அதில் ஜோதியாய் நீ மலர;
உலகின் ஒளியே,
இருளின் இருப்பே.

வெறுப்பு, நட்பு, ஆசை, காதல், பாசம், பந்தம்;
எல்லாம் அற்று உன்தன் பற்று.
பஞ்சாட்சரம் கூற,
மாயை மாறும்.

நாள் தோறும் உன்னையே,
உன் நாமமே கூறும்
என் நாவு.

அருளிடு இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 117. ஆதரவானவனே

போதும் என்று தோணும் போது,
கண்ணில் ஏனோ நீர் வருது.
கருணை கடலே,
அந்த கடலை கடைந்து எடுத்த ஆலகால விஷத்தை
எம்மை காக்க நீ பருகி,
நீளமாய் ஆன கண்டனே.

உன் அசைவுகள் அனைத்தும் ஆக்கமே;
எந்தன் மேல் அதன் தாக்கமே.
என்னை வேறாக்கி,
உண்மை அறியவைத்து,
உன் முன் உருகவைத்து.

ஆதரவான பரமசிவனே,

என் இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 118. சிவபதம்

என் இறைவா பிறந்தநாள் இன்று
மானுடனாய் நான் பிறந்த நாள் இன்று
உன்னை நினையா இருந்ததில் விளைவா
அதற்கு விலையாய் எந்தன் வினையா
நடந்தவை யாவும் நன்மைக்கே
உன்னை நினைய உன் அருளில் நனைந்து
சிவத்தில் ஊறி சிவபதமாக மாறி
உன்னை புகழும் நாவாய் எந்நாளும் அருளிடு
இறைவா
பரிசான பரம்பொருளே
பாதுகாப்பாய் என்னை

என் சிவனே
பொற் பாதம் பணிந்தேன்.
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 119. அகிலாண்டேஸ்வரா

பொறுமையனே,
அருமையனே,
அற்புதம் காட்டும் ஆலகாலனே,
அண்டம் ஆளும் அகிலாண்டேஸ்வரா.
கேட்டவாய்
அடைக்கும் மாறு குடுபவனே,
உன் மந்திரம் மட்டும் பாட,
அத திறக்க வைத்த தெய்வமே.

தேவை அகற்றி,
தேகம் பிரித்து,

என் நாளும் என் நாவிலும் நினைவிலும்
நின்றாடும் பஞ்சாச்சரம்

போதுமே.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 120. தாங்கி பிடிப்பான்

யாருமில்லை என்று தெரிந்த பின்பு,

அறிகிறேன் உன்தன் அன்பு.

சிக்கிக்கொண்ட சிக்கலுக்குள்

வெளிவரலாம் என நம்பி இருந்தேன்,

அகப்பட்டது அழிவிற்கு.

தப்பிக்க வழியில்லை என

புலப்பட்ட பின்,

புலம்பி பயனில்லை.

இனி பயமும் எனக்கில்லை.

இருக்கும் ஒவ்வொரு நொடியும்

உன் புகழ் பாடி,

முடிந்த வரை உன்னை தேடி,

முடியும் வரை உன்னை உணர்ந்து,

உன் ஏற்பிலே ஈர்பிலே,
உன் பாதத்தில் தவழ்ந்து,
ஆனந்தமாய் உள்ளேன் அய்யா.

தடுக்கி விழுந்ததாய் நினைத்தேன்,
நீ தாங்கி பிடிப்பாய் என்றால்,
தயங்காமல் விழுவேன் என் இறைவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 121. ஏமாற்றம்

ஏமாற்றம் என்று தெரிந்த பின்பும்,

மாற்றம் மேல் முன்போல் நம்பிக்கை ஏனோ.

மாற்றம் மனதில் தான் வேண்டும் என,

வேண்டட வேண்டட தெளிவடைந்தேன்.

எதுவும் மாறாது, தழும்பு ஆறாது.

சீண்டினால் வலிக்கூடும்,

சிந்தித்தால் வழி கிடைக்கும்.

எஞ்சிய ஜீவனில்

சிவனின் நாமம் கூறிடு மனமே,

அவரையே எண்ணிடு

அணுதினமே.

தண்டங்களாய் சில,
தடுமாற்றம் தரும் பல,
உறவோ உணர்வோ,
உன்னிடம் சரணடைந்தேன்.

உன்னையே நான் அடைந்தேன்,
பொற் பாதம் பணிந்தேன்.
அனைத்தும் உன் அடியில்,
நானோ அதற்கடியில்.

உன் அருளாலே உன்னை துதித்து,
ஓம் நமசிவாய என்னும் பஞ்சாச்சரம்

பாடி உன்னையே நாடி.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 122. ஆனந்த சொருபமே

உன்னை பாட உன் நடனம் காண,
கோடானு கோடி பேர்கள் இருக்கையில்.
என்ன புண்ணியம் செய்தேன் நானும்,
நடனம் கண்டேன் மெய் மறந்தேன்.

உன்னை பாட
ஒவ்வொரு நொடியும்,
துடிக்கும் என் நாவு.
பஞ்சாச்சரத்தின் பயன்
இதைவிட வேறு என்ன இருக்கும்?

என் ஈசன்
என்னை அழைத்து, மகிழ்வித்து, அருள்குடுத்து

ஆசி வழங்கிய என் அப்பா.

ஆதரவின்றி இருப்பதாய் உணர

எண்ணம் வர,

அந்த எண்ணத்தில் நீயே வர.

அடடா ஆனந்த சொரூபமே,

உன் பாசத்தை மெச்சினோம்.

கருணையின் சிகரம்,

கருணையின் கடல்,

இந்த சிறுவனுக்கும் பொருள் குடுத்த

புண்ணியனே.

ஓம் நமச்சிவாய;

ஓம் நமச்சிவாய;

ஓம் நமச்சிவாய.

# 123. ரூபங்கல்

உன்னை பாட

உன்னையே நாட

இதனை நாட்கள் வீணாய் கழிந்தது ஏனோ

பதப்படுத்தவ பக்குவப்படுத்தவ

பல ரூபங்களில் நீ இருந்ததை

பல இடங்களில் நான் உன்னிடத்தில் இருந்ததை

உணராமல் நான் உண்மை விளங்காமல் நான்

இருந்தது ஏனோ.

கர்ம வினையின் விளையாட்டா

கழிந்த காலம் அழியட்டும்

இருக்கும் நொடி, உன்னுடையதாகட்டும்

உயிர் உள்ளவரை

உன் நாமம் என் நாவு சொல்லட்டும்

சிந்தை செயல் என எல்லாம் உன்னையே நினையட்டும்.

அருளிடு இறைவா,
உன்னை தொழ
உன் முன் நான் விழ
பொற்பாத பூவாய்
இந்த பாமாலை
உன் புகழ் பாடட்டும்.

தாயின் தாயே
தந்தையின் தகப்பனே
ஒவ்வொரு இடத்திலும்
நீ என்னுடன் இருந்தது
இப்போது நினைவுக்கு

வருகிறது.

உன்னை அறியாமல்
கட்டி தழுவல்
தவர விட்ட நேரம்

என் கண்ணில் நீராய் அந்த நினைவுகள்

விஸ்வரூப காட்சி
யாஷகன்
பாபா
சிதம்பரம்
ஞான லிங்கம்
ஜோதிடரலிங்கம்
பரமனே சிவனே.
ஓம் நமசிவாய;

# 124. மனதினுள் கோவில்

எதுவோ செய்யணும்
எதையாவது செய்யணும்
என துடிக்கும் மனம்.

எதைச்செய்தாலும் எப்படி செய்தாலும்
தவறாய் செய்யும் குணம்
பிறப்பின் அர்த்தம் தேடவே
பிறவாமல் இருக்க வலி தேடவா?

தேவைக்காக தெய்வம் தேடும்
மானிடனா நா?
தோணும் போதெல்லாம் துதிக்கும்

பக்தனா நா?

தோணுவதும் துதிப்பதும்
நின்னையே என்னும்
அடியனா நா?

எதற்கோ எங்கோ
ஓடிக்கொன்டு இருக்கும் நா
பஞ்சாச்சரம் கூற
பாசமாய்   பார்த்துக்கொள்ளும் நீ.

நீ இருக்கையில் எதையும்
யூகித்து குழப்பிக்கொள்ளாமல்
நடந்ததை எண்ணி
வருத்தப்படாமல்.

உன்னையே நினைந்து
நாவால் உன்னை புகழ்ந்து

மனதினுள் கோவில் அமைத்து
அதனுள் உன்னை வைத்து
அனுதினமும் உன்னையே தொழ.

அருளிடு இறைவா.
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 125. அனுபவசாலி

நீ பார்த்துக்கொள்வாய்

எல்லாம் எல்லாம் நீ பார்த்துக்கொள்வாய்.

என் ஆசையே என் வலி,

ஏன் வலி என்று கேள்விக்கு இடமில்லை.

எல்லாம் எனக்கு நானே
செய்துகொண்ட சதி,
நீ கொடுத்த சந்தர்ப்பத்தை
சந்தர்ப்பமாக எண்ணி,
அனுபவித்த அனுபவசாலி,
அணு அணு வாய் வலி தாங்கி,
முடியாமல் முடிக்க கூறி
உன் முன் நான்.
கடைசியில் புரிந்த எல்லாம்

முன்னே விளங்காமல் இருந்தது ஏனோ?

கேள்விக்கு நேரமில்லை

விடையே தேவை.

உன் அனுமதி வேண்டும்

உன்னை துதிக்க,

உன் அருள் வேண்டும்

தேவாரம் படிக்க.

உன்னையே அனுதினம் நினைக்க,

அன்னையே

என் தந்தையே.

ஏற்றுக்கொள் என்னை,

உன் பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 126. கருணை கடலே

நடக்கும் யாவும் நடத்துவது நீயே,

வழியாய் இருந்தால் பயணிக்கிறேன்.

வலியாக இருந்தால் ஏற்றுக்கொள்வேன்,

நீ தருவது எதுவாயினும்

அடியேனாய் என்னை அணைத்துக்கொண்டு தர

சிறு கோரிக்கை.

கருணை கடலே,

அதில் என் கண்ணீரோ ஒரு துளி.

கரைந்து போகும்

கரை சேரும் முன்

உன்னில் நான் மூழ்கி

முடிந்திடவேண்டும்.

சம நிலை நான் அடைய
பக்குவ படுத்தும்
உன் அன்புக்கு,
அடியேனால் என்ன கைம்மாறு செய்ய?

நன்றி கோடி கூற
உன்னை தேடி
நான் வர
உறுதுணையாய் நீ வா,
பரம்பொருளே.

என்னுள் நீ இருக்கையில்
இருளோ இன்பமோ
எல்லாம் ஒன்றுதான்.
பஞ்சாச்சரம் செய்யும் மாயம்,
இந்த மாய உலகத்தால்
வந்த காயத்தை ஆற்றும்
என்ற நம்பிக்கையே

உன் அருள்.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 127. வழிகாட்டி

முடியாத ஒன்றை
முடியும் என நம்பி
முடிக்க நான் எண்ணி
முற்பட முடிந்தால்
மூலத்திற்கே முடிவாகும்
என முதலிலே முடக்கினாய்
முதற் தடங்கல்,
முயற்சியின் அவசியம்
என முற்பட்டேன்,
முடிந்த அளவு அலைந்து
முயன்றும் தோற்றேன்.

முடியாமல் போனதை
தாங்கி கொள்ள முடியாமல்
எல்லாம் முடிந்ததை எண்ணி

முடங்கி போய் உள்ளேன்.

முடிந்திருந்தால்
முயற்சிக்கு வெற்றியாக இருந்திருக்கும்,
ஆனால் முடிந்த வரை
கஷ்டமாக இருக்கும் என்பது
கலங்கிய மனதிற்கு புலப்பட.
முதலிலே என்னை
தடுத்தாட்கொண்ட
இறைவா,
உன்னை மீறி
என்னையே நான் கீறி
காயத்துடன் புலம்புக்கிறேன்
ஒவ்வொரு நொடியும்
என் ஒவ்வொரு அசைவிலும்
எனனது வழிகாட்டியாக இருக்கும்

சிவமே.

ஓம் நமசிவாய;
முதலும் மூலமும் முடிவும்
உன்னுடனே என
முயன்ற பின் விலகியது.
இனி உன்னை அன்றி வேற
எதுவும் என் முன் வாரா வாறு
காத்துக்கொள் அய்யா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 128. ஏகாம்பரனே

கஷ்டமான வாழ்க்கை ஒன்ன
இஷ்டமான வாழ்க்கைனு
நினைச்சுக்கிட்டு நானும் சந்தோசமா
நடந்துகிட்டு இருக்கேன்.

கஷ்டமோ நஷ்டமோ
எல்லாம் அது இஷ்டம்.
என் இஷ்டமோ நீ அல்லவே
ஆனந்தனே பரமசிவனே.

உன்னை அன்றி எனக்கு எது இன்பம்
உன்ன தாண்டி எப்படி வரும் துன்பம்?
பிரித்து பாக்க நேரம் இல்ல,
மனதில் எல்லாம் நீயே

தில்லை.

எல்லை இல்லா ஏகாம்பரனே,
இன்றியமையா ஈசனே,
பரம்பொருளே,
பரமேஷேஸ்வர.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 129. வாழ்க்கைத்துணை

நடக்கும் யாவும் உன் அருளாலே

நடக்க போவதும் உன் செயலாலே.

என்னால் எதுவும் மாறாமல்

உன் நினைப்ப விட்டு நான் மாறாமல்.

என் நாளும் என் நாவில் நின்றாடும்

உன் நாம பஞ்சாச்சரம் தந்து

வழிகாட்டியாக வழித்துணையாக

வாழ்க்கைத்துணையாக

வாழவிடும் என் ஆண்டவனே.

அனுதினமும் உன்னை நான் உணர்ந்தாலும்

உன்னிடமே என்னை சரணடைய வை,

இறைவா.

உலகம் ஒன்றை நீ படைத்தது

என் உணர்சிகளை அதனுள் விதைத்தது.

நான் இங்கே கிடந்தது போதும்

இதை நிறுத்தி

என்னை பிரித்து

உன்னுடன் சேர்த்துக்கொள்,

ஈஷா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

## 130. உண்மையின் உணர்வே

எனக்குள் வந்த ஈசனே
உனக்குள் அகிலம்
என புலம்படும்
நேரமே.
உன் திருவடியில் நான் திருமறை
படித்திட வேணுமே.

வேண்டா எதுவும் சேராவாறு,
வேண்டும் என்று எதுவும் கேளா மாறு.
பார்த்து நீ காக்க,
நான் உன்னையே நினைக்க.

உன் பொற்பாதம் புகழ் பாடும்
என் நாவில்
நீயே நின்றாடும்.

உண்மையின் உணர்வை
பஞ்சாச்சரம் தர,
அதையே நித்தமும் நான் உறைய
வாழ்த்திடு இறைவா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 131. பரமனே

நின் மதி வேண்டும் ஈஷா,
பரமனே
என் மனம் உன்னையே என்ன வேண்டும்.
நமசிவாய என்னும் மந்திரம் நான் கூற,
குறை ஒன்றும் இல்லாமல் நீ பார வேண்டும்.

இன்பமும் துன்பமும் அலையாய்
கரை தொட்டு செல்கின்றன
அதனுடன் உருண்டோடும், சிறு மண்ணாய்
இருந்த என்னை கரை தேத்தி
அலை நெருங்க விடாமல்
உன் பாதம் என் மேல் இருக்க,

வேண்டுகிறேன் நான்.

லட்சியம் எல்லாம் உன் பொற்பாதம்,

நம்பிக்கை எல்லாம் உன் திருவடி.

என் இஷ்ட தெய்வமே,

என் இஷ்டம் களைந்து

உன்னையே நினைந்து

உன் புகழ் பாடி,

உன் திருவடி அடைந்து

எண்ணில் இருந்து நீ நகலா.

உன்னில் இருந்து நான் பிரியா

வரம் குடு, இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 132. பரவசனே

ஏன் இந்த நிமிடம்
நான் இருக்க வேண்டும்
என கேள்விகள் பல நேரம் என்னை கொள்ள.
சாகாமல் நான் வாழ
சாதுவாய் நான் வாழும்
நாட்களை நம்பி
என் அய்யன் துதி பாட.

நாவில் நீரே,
நாசி குழலின் சுவாசமே,
மண்ணாய் என்னை ஈர்த்து நிறுத்தி.
ஆகாசம் போல் நினைவாய்
நெஞ்சினுள் நெருப்பாய்,
ஐம்பூதமாய் நீ இருக்க,
உன்னுள் நானும்

என்னுள் நீயும்.

நானே நீ என உணரவைத்து

கஷ்டம் நான் படும் இஷ்டம்.

எல்லாம் கடந்து உள்ள வரை,

உன்னையே நினை என உணர்த்திய இறைவா.

எல்லாம் மறந்து சிவனையே நினைந்து

ஓம் நமசிவாய என்று கூரையில்

என்ன ஒரு நிம்மதி.

ஓம் நமசிவாய என கூரையில் என்ன ஒரு

ஆனந்தம்.

ஓம் நமசிவாய என கூரையில் என்ன ஒரு

பரவசம்.

எல்லாம் தந்த இறைவா,

பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

## 133. சூழல்

உன்னை புரிந்தும்
நீ இருப்பது தெரிந்தும்
சுழலுக்குள் இன்னும் சுற்றுவது ஏனோ.

முடிவு அறிந்தும்
முடிக்க தெரிந்தும்
தொடர்வது வீணோ.

நிறுத்தாமல் உன் நாமம் கூற,
ஓம் நமசிவாய என்று என் நாவில் நீ வாழ.
வரவேற்கும் நேரம்,
ஐம்புலனையும் கட்டி
உனக்கு தொன்று நான் செய்ய
உன் பொற்பாதத்தில்

ஒரு இடம் கொடு, இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 134. ஓம் நமசிவாய

ஒரு நிமிடம்
ஒரே ஒரு நிமிடம்
ஓம் நமசிவாய கூற,
எல்லாம் இங்கு அதுவாய் மாற.
ஆழ்மன எண்ணங்களும்
கண் முன் நிகழ.

எதிர்பார்ப்பின்றி நீ தரும் அன்பு,
எதிர்பாராமல் கூறும்
ஓம் நமசிவாய
என்னும் சொல்லுக்கா
எத்தனை எத்தனை வினைகள் செய்தாலும்,
இந்த பித்தனை பிரியா விடை குடுக்க முயற்சிக்க,
உறுதுணையாய் நீயே இருந்து,

ஊக்கம் அளித்து
பாவம் ஒழித்து,
பக்குவ படுத்தி,
பழக வைத்து,
ஏற்றுக்கொள்ளும்,
ஈஷா.

உன்னடி,
பொன்னடி,
பாதம் பணிந்தேன்,
அடியேனாய் சேர்த்துக்கொள்,
அருணாச்சலேஸ்வரா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 135. அழகு லிங்கம்

என்ன நான் செய்ய
எங்கு நான் செல்ல
நேரத்தை குறைத்து
என்னுள் உன்னை நிறைத்து.

நினைப்பும் நிகழ்வும் இன்றி
உன்னையே அன்றி
என்றும் தோன்றா எண்ணம்,
என் அழகு லிங்கம்.

உன்னையே தொழுது
உன் நாமாத்தை உச்சரித்து,
ஒன்றும் எதிர்பாராமல்,
உன் பொற்பாதம் பணிந்து

மடிய ஈர்த்துக்கொள், ஈஷா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 136. வெளியேத்து

எதுவும் சரி இல்லை

ஏன் என்றே தெரியவில்லை.

ஒன்று மட்டும் புரிகிறது,

வறுத்த பட

சந்தோசம் இன்றி இருக்கத்தான்

இத்தனையும் இங்கு நடங்குது,

வேதனை படுத்தி வேக வைத்து,

வினை என்னுடன் வேகமாய் விளையாடுகிறது.

இதில் இருந்து வெளிப்பட வழி இல்லை.

தெரிந்தும் என்னை நானே

வேதனை படுத்த

எதையாவது செய்து கொண்டே இருக்கிறேன்.

ஈஷா, அனைத்தையும் நிறுத்து,

இதில் இருந்து என்னை வெளியேத்து.

முடியவில்லை என்று சொல்ல மட்டும் முடிகிறது,

நடப்பவை எதுவும் முடியவில்லை.

உன் துதி பாட வேண்டும்

என்று எண்ணம் கொடு,

உன்னை மட்டும் எண்ணி

உன் துதி பாடி

மடியும் வரை,

உன் மடியினில் இடம் கொடு.

மடிந்த பின் பொற்பாத சேவை பண்ண.

அருளிடு ஆண்டவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

# 137. கலங்கா மனம்

கஷ்டம் கஷ்டம்,
கண்கலங்க வைக்கும் கஷ்டம்,
மனம்பதறவைக்கும் கஷ்டம்,
உடல் நடுங்க வைக்கும் கஷ்டம்.

இத கடந்து சென்று என்ன வேண்ட?

சந்தோசமா,
மகிழ்ச்சியா,
நிம்மதியா?
சுக துக்கம் என எதுவும் வேண்டாம்.

நின் பாதம் பணிந்து,
உன்னையே நினைந்து,
சிவ மந்திரம் கூறி,
ஓம் நமசிவாய.

என ஓத சிறு இடையூறும் வாராமல்,

காத்திடு இறைவா.

உன்னை மட்டும் நினையும்

கலங்கா மனம் கொடு,

ஈஷா.

வேறு யாதொரு

சிந்தனையும் சீண்டாமல்,

எங்கும் நான் சிதறாமல்,

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 138. நாடிதுடிப்பு

வரம் ஒன்று வேண்டும்,
உன்னை நினைக்க,
உன்னை துதிக்க,
உன் நினைவிலே மூழ்க,
உன்னையே தியானிக்க.

சிந்தை செயல் எதிலும்
நீயே இருக்க;
உன்னுடன் நான் என்றும் இருக்க.
ஓம் நமசிவாய, என் நாடிதுடிப்பாய் மாற,
வரம் கொடு, இறைவா;
யாரிடம் கேட்பேன்?
உன்னை அன்றி என்னை மதித்து
மரியாதை செலுத்த;

யாரை தேட?

உன்னை மட்டும் அடைய

வரம் ஒன்று கொடு.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 139. பஞ்ச பூதமே

மீண்டும் மீண்டும் கூற வேண்டும்,

உன்தன் நாமம் பாட வேண்டும்.

தடைகள் இன்றி, தயக்கம் இன்றி,

மனதில் வேறு எண்ணம் இன்றி,

உன்தன் உருவம் மட்டும் வேண்டி,

எந்தன் கண் முன் நீயே தோன்றி,

காட்சி ஒன்று தருவது போல,

கண்சிமிட்டும் நேரமெல்லாம் உன்னையே

காண வேண்டும்.

கண்ணுக்குள்ளும்,

கண்ணீரிலும்,

உள்ளுக்குள்ளும்,
உள்ளத்திலும்,
மனதார உன்னையே
போற்றி புகழ்ந்திட வேண்டும்.

பஞ்ச புலனும் அடக்கி,
பஞ்ச பூதமும் துணையாய்,
பஞ்சாச்சரம் கூற,
பாதுகாவலாய் நீயே,
அருளிடு என் தாயே.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 140. ஆதரவான அன்பனே

உன்னை பாடணும்,

உன்னை துதிக்கணும்,

உன் நாமம் புகலனும்,

உன்னை மட்டும்

என் மூச்சுள்ளவரை நினையனும்.

வேற எதுவும் வேண்டாம்,

உன் உருவம்,

உன் காட்சி,

உன் அனுபவம்,

உன் அருள்,

உன் தயவு,

உன் பாசம்.

பரமசிவனே என் ஈசனே,

தந்தையும் தாயும்,

அம்மையும் அப்பனும்,
ஆதரவான அன்பனே.
இன்றியமையா ஈகை
உன்தன் அன்பு
உயிராய் நீயே.
ஏற்றுக்கொள் என்னை,
எடுத்துக்கொள் என்னை,
உன் பொற்பாதம் பணிய,
அருளிடு இறைவா,
என் ஆண்டவா.
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 141. அகிலம்

அகிலமும் அண்டமும்
உள்ளது என்பது
நான் அறியேன்.
பிறந்ததும் இறப்பதும்
நடுவிலே
சிரிப்பதும் அழுவதும்
நான் அறியேன்.
வெற்றியும் தோல்வியும்,
புண்ணியம் பாவமும்
நான் அறியேன்.

எதுவும் அறியா ஏமாளி,
நம்பி கெடும் நான்.
கேட்பதெல்லாம் நம்பிக்கையோடு,
உன்னிடம்

உன்னை மட்டுமே
எதுவாயினும் எப்படியாயினும்
ஏற்றுக்கொள் என்னை,
ஈஷா.

உன் பாதம் பணிந்து,
உன் நாமம் புனைந்து,
உன்னையே நினைந்து,
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 142. உன்னை ரசித்து

எல்லாம் முடித்து போக
நான் இங்கு இல்லை,
எல்லாம் விட்டு போக
நான் இங்கு இல்லை.
மனதார மனம் முழுதும் நீயே,
நான் என்பதும் நீயே,
என உணர்ந்து மகிழ்ந்து
திரும்பி பார்க்க கூட தோணாத
மனம் கொண்டு
உன்னை ரசித்து
உள்வாங்கி,
ஓம் நமசிவாய
என்னும் பஞ்சாச்சரம்
கூறி உன் பாதம் பணிய

அருளிடு இறைவா.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 143. வாழ்வுக்காலம்

நான் அழுவேன் என்று தெரிந்தும்,

சில நிகழ்வுகள் நடப்பது,
விதியோ சதியோ.
என் அப்பன் நீ இருக்கையில்
என் இருகை கூப்பி,
உன்னை வணங்கி
உன் திரு நாமம் பாடுவேன்.

ஓம் நமசிவாய கூற,
இந்த மாய உலகை விட்டு நான் மாற.

வாழ்வுக்காலம் கொஞ்ச காலம் தான்;

அதுற்குள் அதை செய்யணும்,
அதற்குள் இதை செய்யணும்,
இது கிடைக்கவில்லை,

அதை அடையவில்லை,

என்ற எண்ணம் எல்லாம் மறைந்து

உன்னையே நினைந்து,

பொற் பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 144. உன்னை சேரும் வழி

எனக்கென வந்த லிங்க தங்கமே,

ஆசை நெருப்பில் அகல்விளக்கேற்றி,

காமப்பிடியில் சிக்கிய உடம்பை

எண்ணெயாய் அதில் ஊற்றி,

வெளிச்சமாய் விளங்கிய பரம்பொருளே.

ஓம் நமசிவாய என்று நான் கூற,

வினை அனைத்தும்

உன்னை சேரும் வழியாய் மாற.

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய;

ஓம் நமசிவாய.

# 145. வீரனே

விதி மாற்றும் வீரனே,
சதி அளிக்கும் சங்கரனே,
பாசம் அறுக்கும் பரமசிவனே,
ஆசை அகற்றும் ஆதியோகியே,
எண்ணம் மாற்றும் ஏகாம்பரனே,
ஆனந்தம் தரும் அனந்தனே,
இன்பமே,
ஈசனே,
நடுநிலை நாட்டியமே,
நாடு, காடு,
அண்டம், பிண்டம் எல்லாவற்றிற்கும்
மேலான அகண்டனே.

ஓம் நமசிவாய;

# 146. துயரடைந்தேன்

அளவுக்கு அதிகமாக ஆசை கொண்டு

என்னையே நான் மாட்டிக்கொண்டு

இறந்தும் பிறந்தும் வலிகள் அனுபவித்து

தீரா துயரடைந்தேன்.

துயர் போக்க என்னை காக்க

சாவது முடிவாயின் சாக தயார்.

மீண்டும் பிறவாமை ஒன்றே

சாப விமோசனம் என புரியவைத்த,

சிவா.

சிவா புராணம் தந்த தந்தையே

வழிகாட்டியே.

வழி தவறாமல் காத்திடு அய்யா,

பாதை மாறி போகாமல்.

வேற எதுவும் தேடாமல்
உன் பாதம் பணிந்து,
உன் நாம் கூறி,
உன்னையே பாடி,

பரம ஆனந்தனே,
காலடியில்
ஏற்றுக்கொள் அய்யா.

ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய;
ஓம் நமசிவாய.

# 147. உன்னுள் அடக்கம்

நடந்ததை நினைப்பதும்,
நினைப்பது நடப்பதும்,
நடக்காமல் இருப்பதும்,
கேட்டது கிடைப்பதும்,
கிடைக்காமல் இருப்பதும்,
இறப்பதும் பிறப்பதும்,
தவப்பதும் தவிப்பதும்,
உரைப்பதும் நிற்பதும்,
விழிப்பதும் கிடப்பதும்,
அசைவதும் இசைவதும்,
யோசிப்பதும் யாசிப்பதும்,
ஓம் நமசிவாயா
உன்னுள் அடக்கம்
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 148. என்னுடைய இடம்

எனக்கு ஏன் உன்னை பிடிக்கும்,

ஆயிரம் ஆயிரம் காரணம் கூறலாம்

அழகு நீ
அகிலம் நீ
அன்னையும் அறிவும்
அங்கமும் அப்பனும்
அண்டமும் அளவும்
அசைவும் அலையும்
அன்பும் அனைத்தும் நீ
நீ சூடிய பிறை அழகா
கழுத்தில் சுற்றி நிற்கும்
நாகம் அழகா
உன் தியான நிலை அழகா
திவ்விய முகம் அழகா
நீல சங்கு அழகா

நெற்றியின் மூன்றாம் கண் அழகா

திருநீறு மனம் அழகா

புலித்தோல் ஆடை அழகா

உடுக்கை அழகா

அந்த சூலம் அழகா

இது அனைத்தும் இன்றில்

உலகின் அர்த்தமாய்

அந்த லிங்க வடிவே அழகா

என் அழகா

என்னுடைய இடமே எனக்கு அழகு

அது உன் பொற்பாதமே

இந்த உலகே அதனடியில்

அதுவே அழகு

என் அழகா

உன் பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

## 149. தாண்டவனே

உனக்கு ஏன் என்னை பிடிக்கும்
ஒரு காரணம் கூட புலப்படவில்லை
புலம்பும் நான் எங்கே
பூலோக பிதா நீ எங்கே

அசிங்கத்தின் அழுக்கு நான்
புனிதமான புண்ணியம் நீ
எச்சமா எச்சையா
என்ற பிரிவரியா பிறவியை
வெண் பிறை சூடிய சடையன்

சங்கடம் இன்றி சங்கரா
மனம்கொண்ட மகாதேவா
ஈர்த்த ஈஷா
பாசம்காட்டி என்னையும் பாலகனாய்

பார்த்துக்கொண்ட அரும்பொருள்

அன்பின் இலக்கணமே

என்ன புண்ணியம் செய்தேன் நான்,

தராதரம் இல்லா தன்னலம் காணும்

தகரத்தை தங்கம் கூட சேர்த்த

தாண்டவனே

உன் பொற்பாதத்தில்

ஓர் இடம் கொடு இறைவா

உன் புகழ் பாடி

உன் நாம கூறி

உன்னுடனே நான்.

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

## 150. அதைவிட பெரிது

ஓம் நமசிவாய கூறும் போது
கரையும் மனம்
இது வேண்டும்
அது வேண்டும் என
கேட்டு மந்திரம் கூறும் மனதிற்கு
புலப்பட்டது
மந்திரம் கூறுவதே வரம்
அதைவிட பெரிது என
இந்த உலகும்
எதுவும் இல்லை
ஓம் நமசிவாய
கூற
இடையூறு இல்லாமல்

பார்த்துக்கொள் அய்யா.

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

## 151. துணை

தப்பும் தவறும்
தேடி தேடி செய்யும் நான்
மோகம் காமம்
என முரண்பாடு இல்லாமல்
போகும் நான்

தன்னலம் சுயநலம்
என ஆசையின் வலையில்
என்னை நானே
அகப்படுத்திக்கொள்ளும் நான்
வலித்தாலும் வலி புரிந்தாலும்
வலிக்கும் என தெரிந்தாலும்
மீண்டும் மீண்டும் புதை குழியில்
இறங்கும் எண்ணமுடன் இருக்கும்
மூடனுக்கு

ஒரே ஒரு நம்பிக்கை

ஓம் நமசிவாய

புனிதனோ மனிதனோ

என்னை ஆக்க வேண்டாம்

உன்னை பாட

உன் நாமம் கூற

துணையாய் இரு

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

# 152. கலைவாணனே

நீ தோன்றிய நேரமெல்லாம்
எல்லை மீறி
என்னை மீறி
நான் என்னை
துன்புறுத்தும் முன்
முன்
நீ தோன்றி
பல ரூபங்களில்
உண்மை விளக்கிய
ஞானனனே
சாந்தமான சங்கரனே
ஆனந்தனே ஆனந்தமே

ஒரு கால் ஊன்றி
ஒரு கால் தூக்கி
அந்த அர்த்தம் புரிய

பல பிறவி எடுத்தது
அந்த ஆட்டம் காண
பல கண்கள் மாற்றி
கை பாவனையும்
உன்தன் கண் பாவனையும்
என் எல்லா பாவங்களையும்
களைத்து
கலைவாணனே

நெற்றியில் ஒரு கண்
நெருப்பே அதன் முன்
தலையில் கிரீடமாய் நிலவு
கழுத்தில் நகையாய் நாகம்
புலித்தோல் ஆடை
திருநீறு வாடை
தடியாய் சூலம்
அதன் அணியாய் உடுக்கை
ரூட்த்தராச மாலை

உச்சந்தலையில் கங்கை
பாதி உடம்பாய் அம்பிகை

உடல் சிலிர்த்து
கண் கலங்கி
ஆனந்த கண்ணீராய் வரும்

சிவம்.

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 153. நாதனே

நாதங்களில் நாதனே
அர்த்த நாதீஸ்வரா
நாதியற்றவர்களின் அர்த்தமே
அர்த்தமற்றவர்களின் நாதனே

அன்னையும் அப்பனும்
அன்பும் பண்பும்
ஆணும் பெண்ணும்
அறமும் வரமும்

பிறப்பும் இருப்பும்
கிடைப்பதும் அமைவதும்
தருவதும் பெறுவதும்
வருவதும் மறைவதும்
நீரும் நெருப்பும்
ஆசையும் அனைத்தும்

ஆகாயமும் பூமியும்
என்னுள்ளும்
உன் நாமம் சொல்லும்
என் மூச்சுக்காற்றும்
பொற்பாதத்தில்
கரமும் சிரமும்
பணிந்து

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 154. ஞானனனே

எல்லா முடியும்
என்னால் முடியும்
என்ற நினைப்பின்
முற்று புள்ளிகள்
வரிசையாக நிற்க.....................

எல்லாம் முடியும்
அதுவாய் முடியும்
என்னால் எதுவும் முடியாது
என உணர்கின்ற பொழுது
ஏற்க மறுக்கும் மனம்:
இறைவா.

உன்னிடம் என்ன கேட்க
நான் நினைப்பதெல்லாம்
நடத்திக்கொடு என்றா

நான் கேட்டதெல்லாம்
கொடு என்றா
எனக்காணதை நீயே தருவாய்
தருகிறாய்
தந்தாய்
நல்லதாக நடக்க வேண்டியதை
நீயே நடத்தி வைக்கிறாய்
வைப்பாய்
வைத்தாய்

இன்னும் என்னுள் ஏன் சஞ்சலம்
உன்னை துதிப்பதை தவிர
வேறு என்ன சிந்தனை
எல்லாம் அகற்றி
உன் எண்ணம் மட்டும்
என்னுள் நிறுத்தி

ஓம் நமசிவாய கூற

அருளிடு இறைவா

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

# 155. தவறிய நேரங்கள்

நிறைவேறாத ஆசைகள்
ஆயிரம் இருக்கு
காலம் கடக்க
அதை இப்போ நினைக்க
என்ன ஒரு கிறுக்கு எனக்கு

ஓம் நமசிவாய கூற
தவறிய நேரங்கள் அவை
அதை உணரும் போது

நான் செய்த தவராய்
இல்லை நானே தவறா
உன்னை அன்றி வேற ஒன்றும்
தேவை இல்லை

ஓம் நமசிவாய

எந்நாளும் என்நாவில்
நின்றாடும் உன் நாமம்
பஞ்சாச்சரம் போதுமே

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 156. பிறவி

எத்தனை பிறவி எடுத்தேன்
எத்தனை பிறவி எடுப்பேன்
கேள்வி கேட்கும் நேரம் வேண்டாம்
விடை கேட்கும் நேரமாய் இந்நேரம்

உன்னை துதிக்க
திறம் குடுத்த இறைவா நன்றி
உன்னை காண
வரம் குடுத்த இறைவா
உன்னுள் அடங்க
இடம் குடு இறைவா

உன்னை ரசிக்கிறேன்
துதியாய் படிக்கிறேன்

பாடலாய் பாடுகின்றேன்

இருப்புக்கும்
இந்த பிறவிக்கும் நன்றி
உன் நாமம்
நாளும் நான் கூற
வாழ்ந்திடு
இறைவா

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 157. நீ மட்டுமே

நடப்பதொன்றும் அறியாமல்
எங்கு செல்வதென்று தெரியாமல்
காலம் மட்டும் கடந்து செல்கிறது
இந்த காலம் முடிவதற்குள் மனதார
உன்னை துதிக்க வேண்டும் இறைவா

நீ மட்டுமே நீ மட்டுமே
உன்னை அன்றி வேற ஒன்றும் வேண்டாம்
எல்லாம் எனக்கு துன்பம் தருகிறது
ஆசையை தூண்டி

அழுகவைக்கும்

நேரம் மறந்து உன்னை பாடி
உன் புகழ் கூறி
திரு நாமம் கூறி
ஆனந்த மயமாக அருளிடு இறைவா
பிரயனே இந்த பித்தனை பிரியமுடன்
பார்க்கும் உன் அன்பிற்கு

நன்றியாக நற்பாடல்கள் இயற்ற
அருளிடு இறைவா.

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 158. திருவருள்

துன்புறுத்தும் நொடி
அணுவணுவாக துன்பப்படும் மனம்
வேதனை அளிக்கும் என் குணம்
பட்டும் திருந்தாமல்
பாடாய்படுத்தும் ஆசை

ஆண்டவா ஆனந்தன்
எல்லாம் விட்டு
சிவபுராணம் தொட்டு
தேவாரம் படித்து
உன்னை தொழுது

பரமசிவனே
என்னை அழைத்துக்கொள் இறைவா

பிறைசூடிய உன் முகம்
நெறி தவறா நெற்றிக்கண்ணா
நீண்ட சடை உடைய
நீல கண்டா

புலித்தோல் ஆடை
திருநீறு உடுக்கை ஒளி
சூலம்
எல்லாம் என் கண்ணுக்குள்
காட்சியளிக்கும் உன் திருவருள்

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

## 159. சரணடைந்தேன்

உன்னை அறியும் முன்பு
ஏதேதோ செய்து
எனக்கு நானே
சூனியம் செய்து இருந்தது
உணர்ந்தது
உன்னை அறிந்த பின்பு
மாயை என்னும் வலை
ஆசை என்னும் தூண்டில்
சிக்கிய என் பிறவி
மீண்டு வராமல்
மீண்டும் மீண்டும் வரும்
நான்
இதை அறுத்து
உன்னை துதித்து
திருநீறு அணிந்து
உன்னையே புகழ்ந்து

ஓம் நமசிவாய என்னும் பஞ்சாச்சரம்

செய்யும் மாயமே

மயானம் போகும் உடல் விட்டு

மன்மதன் கதை முடித்த மஹான்

உன்னை சரணடைந்தேன்

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

# 160. தர்மத்தின் பிரபுவே

காதில் கமண்டலம்
நெற்றியில் கண்
மூன்றாம் கண்
ஞான பார்வை
தலையில் கங்கை
அருகிலே பிறை
அருவியாய் சடைமுடி
நீல நிற கழுத்து

ருத்தராட்சம்
திருநீறு
சூலம்
உடுக்கை
புலித்தோல்
திருவோடு
புண்ணியனே

தர்மத்தின் பிரபுவே

பாதியுடல் அம்பிகையே

நந்தி முன்
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

## 161. எல்லாம் மாறுது

எல்லாம் மாறுது
கண்முன் எல்லாம் மாறுது
எல்லாம் முடியும்
என்னால் முடியும்
என்ற எண்ணமும் மாறுது

எதையும் மாற்ற முடியல
மாறுனத தடுக்க முடியல
உன்ன பாடுவதை தவிர வேற
எதையும் நினைக்க தோணல

ஏமாற்றும் உலகம்
ஏமாறும் நான்
எல்லாம் மாற்று உன் நாமத்தை

என்னுள் ஏற்று

ஓம் நமசிவாய கூறவே
உன்னை நான் காணவே
பரவசமாய்

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

## 162. ஆதி சங்கரா

ஓட்டம் நிறுத்த
ஆட்டம் நிறுத்த
வாட்டி எடுக்கும்
இந்த வாழ்வை நிறுத்த

பஞ்சராட்சரம் பயப்படாமல் கூற
செய்த பாவமெல்லாம்
இருப்பிடம் தெரியாமல்
கரைய

உன்னையே நினைய
ஆதி சங்கரா
ஆதிசேஷா

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய

## 163. பெருங்காயம்

எனக்கு என்ன வேண்டும்
எனக்கென எல்லாம் தந்த நீ
என் வலி நீக்கி
உன் வழிபடுத்து

ஆசை மாயை
பேராசை பெருங்காயம்
வெறுப்பு விருப்பு
எல்லாம் கடந்து

உன் நினைப்பில் நான் நனைய
அருள் தா
ஆண்டவா

ஓம் நமசிவாய

# 164. முட்கள் மிகுந்த பாதை

எதற்காக இந்த பயணம்
முட்கள் மிகுந்த பாதை
அதை பூக்கள் என மயக்கத்தில்
மிதிக்கும் கால்கள்

குத்திய பின்பும் மீண்டும் தேடி தேடி
முட்களில் மேல்
இந்த பாதை
சுகம் என சோகம்
உணவு உறவு
உடை உண்மை
உயிர் உழைப்பு
உறுப்பு உடம்பு
என தேவை உள்ளவற்றில் மனம்
நினைப்பு நினைவுகள்

என தேவையறியா
வீணாகும் நேரம்

ஓம் நமசிவாய
சிவனே ஏற்றுக்கொள் என்னை
உன் பொற்பாதம் பணிந்து
உனையே நினைந்து
மகிழ்ந்திட வை

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 165. ஆனந்தமயம்

உன்னை மட்டும் நினைப்பதையே
அனுதினமும் செய்திட
என்ன இங்கு நடந்தாலும்
எதுவாக இருந்தாலும்
நீ நடத்தும் யாவுமே
நன்மைக்கென்று ஆகுமே

ஓம் நமசிவாயவே ஓம் நமசிவாய
ஓம் நமசிவாயவே ஓம் நமசிவாய

பிறையும்
கால் சலங்கையும்
திருநீறு மனமும்
என்னை சுற்றியே இருந்திட

அதில் நீ நடனமிட
ஆனந்தமயம் ஆகுமே

ஓம் நமசிவாயவே
ஓம் நமசிவாய.

## 166. அருளிடு ஆண்டவா

ஓம் நமசிவாய
கூற
புண்ணியம் கோடி
செய்திருக்க வேண்டும்
புண்ணியம் கோடி
செய்திருந்தாலும்
உன் அருளின்று
அணுவும் அசையாது
அணுவில் என்னை
செலுத்தி
அன்பாய் என்னை வளர்த்து
ஆதரவாய் ஓம் நமசிவாயம்
தந்து
கூட்டிச்செல்லும் இறைவா

தொடர்பால் வந்தாலும்

தடங்களாய் நானே நின்றாலும்

தள்ளாடி நானே விழ நினைத்தாலும்

தாங்கி சென்று

உன் பொற்பாதம் அடைய

அருளிடு ஆண்டவா

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

# 167. உன்னிடம் சேரவே

நமசிவாயம் என நானும் கூற

இத்தனை நாள் ஆனது ஏனோ

எத்தனையோ வழிகளை கடந்திருப்பேன்

உன் நாமம் என் நாவில் வழியே வர

எத்தனையோ இன்னல்கள் கடந்திருந்தேன்

திருவாசகம் தொட

பல ஜென்மங்கள் அழுந்தி இருப்பேன்

தேவாரம் படிக்க

எத்தனை பிறவி துன்பப்பட்டிருந்தேன்

உன் புகழ்

உன் செயல்

உன் ஈர்ப்பை

பாட

எழுத

உணர

பிரயனே

முக்கண்ணா

திருநீருமேனியனே

திருசூலனே

புலித்தோல் போர்த்திய யோகியே

உடுக்கையாய் வரிகள்

உன்னிடம் சேரவே

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

## 168. அருளிடு இறைவா

எதுவாயினும் நீ இருக்க
எவனாகினும் நீ இருக்க
என்றென்றும் நீ இருக்க
எப்பொழுதும் நீ இருக்க

எனக்காக நீ இருக்க
என்னுள்ளம் நீ இருக்க
என் உள்ளம் நீ இருக்க
என் நாவு உன்னை படிக்க

என் இரு கை உன்னை அழைக்க

அருளிடு இறைவா
உன் பொற்பாதம் அருகே

நான் இருக்க

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

## 169. அனுமதி

கொஞ்சம் கஷ்டம்
கொஞ்சம் மனவருத்தம்
அடுத்து என்ன
எதற்கு இங்க

என எல்லா கேள்விகளுக்கும்
இந்த உறுப்பு
தொடரும் பிறப்பு
எல்லாவற்றிருக்கும்
விடை குடு இறைவா

உன்னை புகழ்ந்து
உன் நாமம் கூறி
ஓம் நமசிவாய என
பஞ்சரச்சாரம் கூற
அனுமதியுடன்

அருளும்
இறைவா.

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 170. கலையின் அரசே

நடப்பதை ஏற்கும் மனநிலை
எதுவாகினும் சம நிலை
மனதில் என்றும் உன் அலை
உன்னை காண உதவும் என் கலை

அறியாமல் இருந்தது
என் பிழை
சிக்கியிருந்த
மாய வலை
அதை மொத்தமாக
நீயே கலை
இந்த பிறவியே
அதன் விலை

உன்னை நோக்கிய சாலை

அதில் பயணிப்பதே என் வேலை

இந்த பா மாலை
உனக்கு அணிவிக்கும் வேலை
ஏற்றுக்கொண்டு அருளிடு
எந்நிலையும் இல்ல
கலையின் அரசே
சிலையின் வடிவில் இன்றும்

அனைவருக்கும் காட்சி தரும்
பரம் பொருளே
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 171. ஈன்றெடுத்த அய்யனே

நேரம் போக
நடக்கும் நாடகம்
புரியாத வரை வாழ்க்கை
புரிந்தபின்
இந்த சூழலே
ஒரு சுழல்
மீண்டும் மீண்டும்
மாண்டும் மீண்டும்
வந்து சென்று
வாழ்ந்து தின்று
வாங்கி கொடுத்து
தேவை அறியா
ஒன்றில் இருந்து ஆறு
அறிவும் பெற்று
பெற்றதின் பயனை
உணர மறந்து

உருளும் உலகின் மீது
இந்த பதரின் பாக்கியம்

ஓம் நமசிவாய

எல்லாம் மாற்றி
உன்னையே என்னுள் ஏற்றி
ஈர்த்து புதிதாய்
என்னை ஈன்றெடுத்த
அய்யனே
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 172. விவேகனே

என்னவனே
என்னுள் எதிலும்
என்முன் தோன்றிய
தங்க லிங்கமே
விவரிக்க முடியாத
உறவு
விவாதிக்க முடியாத
முடிவு
விவேகமான விளைவு
விடிவெள்ளியே
வின்விளக்கே

என் அன்பே என் உயிரே
பங்கில்லா பாசமும்
பாரபடச்சமில்லா பலவும்
தந்த பவளமே

பல வேஷத்தில் தோன்றி
மோசமாகவிடாமல் காத்த
பரமசிவனே

பொற் பாதம் பணிந்தேன்
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 173. வீரியம்

விந்தை செய்யும் வித்தகா
வின் உலக வீரா
விதியின் வீரியம் குறைக்கும்
விசேஷமான பஞ்சராட்சர மந்திரம்
தந்த விமோசகா

விதையே விளக்கே
விசையே விடையே
விடியலே விளையாட்டாய்
திருவிளையாடல் புரியும்
விஞ்ஞானியே
விரும்பும் அடியாரின்
வீட்டில் இதய வீட்லில்
நிரந்தர விருந்தாளியே

விக்கிரகமே

விரைந்து என்னை
வீடுபேறு விட்டிட்ட
விஷேஷா
உன் விறல் அடியில்
சேர்த்திடு

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 174. மாறவேண்டிய நான்

ஓம் நமசிவாய
அலைந்து திரிந்து
காரணம் இன்றி
நானும் வளர்ந்து
மாறும் நாளை
நாளை மாறும் என நம்பி நகர்கிறேன்

மாறவேண்டிய நான்
மண்டியிட்டு உன்னை மட்டும் வணங்கி

எந்த தேவையும் பொறுப்பும்
எதிர்பார்ப்பும் இல்லாமல்

உன் பொற்பாதம் பணிந்து
உன் நாமம் கூறி மகிழ்ந்திட

அருளிடு இறைவா

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

# 175. நீயே தில்லை

உன்னிடம் என்னை தருவதாக கூறி
உன்னிடம் வந்து அனுமதியும் கூறி
உன்னிடமே அருளும் கூறும் நான்
என்னிடம் ஒன்றும் இல்லை
என்றுமே நீயே தில்லை

உன்னை அன்றி வேறு
ஒரு நினைவும்
என்னுள் வாராவாறு
காத்துக்கொள் அய்யா
ஒவ்வொரு நொடியும்
உன்தன் நாமம் கூறும்வாறு

பார்த்துக்கொள் அய்யா

ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய.

## 176. இனி தேவை இல்லை

எல்லாம் விட்டு உன்னை தொட்டு
மனதை உன்னிடம் சமர்பித்துவிட்டு
சரணம் மட்டும் பாடிக்கொண்டு
உன்னுடனே ஆடிக்கொண்டு

எல்லை இனி இல்லை
என் முன் என் தில்லை
நான் இல்லை
நாள் இல்லை
நாளை இல்லை

நடப்பதை யூகிப்பதும்
நடந்ததை யோசிப்பதும்
நடக்கும் என நம்புவதும்

இனி தேவை இல்லை

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய.

# 177. உன்னதமே

என்னுடன் நீ இருக்கும்
உணர்வு ஒன்றே,
ஒன்றாய் உன்னுடன் கலக்க வேண்டும்
என்ற எண்ணம் ஒன்றே,
உருவாக கருவாகி
என்னை உருவமாக்கிய உன்னதமே!
உன்தன் நாமம் நான் கூறுவதே
என் தவமே.
’ஓம் நமசிவாய’ என நானும் கூற,
அருள் வழங்கிய இறைவா,
தேவாரம், திருவாசகம் தந்து
மனம் உருகிட
நீ வா!
உன்தன் அனுபவம்,

சொல்லில் அடங்கா

சொப்பனம்!

சொக்கநாதா,

உன் திருப்பாதம்,

பொற்பாதம் பணிந்தேன்.

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய

ஓம் நமசிவாய!

# 178. அடைக்கலமே

கஷ்டம் என்பதும்,
நஷ்டம் என்பது,
இஷ்டமான நீ என்னுடன் இருக்கையில்,
என்னை என்ன செய்யும்?
நாளை என்பதும்,
ஏழை என்பதும்,
உன்னை நோக்கி வரும் பாதையில்
மறந்தே போகும்.
நீயே அனைத்தும்,
என்னை நீ அனைத்தும்!
திருவடி தந்து
அருளிடு இறைவா.
அடைக்கலம் நீயே,
உன்னிடம் புகுந்தேனே!
ஓம் நமசிவாய

# 179. தியாகராஜரே

எனக்கென நீ இருக்க,
அனுதினமும் உன்னை துதிக்க,
எதிர்வினை ஏது?
கர்மவினை ஏது?
நானே இல்லை,
பின் எங்கிருக்குத் தொல்லை?
எல்லாமும் தில்லை!
அம்பல நடராஜனின்
நாட்டியத்தில் அடங்கும்
சர்வமும்.
சங்கரன் சங்கொலியே,
உடுக்கை மணியே,
திரிசூல தியாகராஜரே!
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய!

## 180. உயிர் எழுத்தே

அன்பே,
ஆருயிரே,
இயற்கையே,
ஈசனே,
உன்னதமே,
ஊக்கமே,
என்னவனே,
ஏகாம்பரனே,
ஐயனே,
ஒன்றானவனே,
ஓம்காரனே,
ஔடதமே.

ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய,
ஓம் நமசிவாய.

### தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

### பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும்,

அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள்

யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

